KALKI
14.1.2007 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

பொங்கல் சிறப்பிதழ்

## ஜாலி ஷாப்பிங்!

## ஆரம்பம் அழகிய 5 தொடர்கள்

ஆக்ஷன்



டிஷ்யூம்!

தொடர்கதை



கொசு!

சரித்திரம்



முதல்வன்!

மண்வாசனை



ஜனங்களின் சாமி!

சாதனை



+2




இந்த இதழுடன்... ஆச்சி மசாலா வழங்கும் புளியோதரை சாதப் பொடி ஒரு பாக்கெட் இலவசம்!

தமிழ்நாட்டில் மட்டும்

As per BIS,
IS:2888-1983.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

Orchard B GCPMSOCN 1167/06

## அரசியல்



33

## ஜெ.வை மன்னித்து விட்டேன்!






## ஆன்மிகம்

76



## சிவமும் சக்தியும்

## ஆரோக்கியம்

66



## அழித்தும் ஆபத்து

## அறிவு



28

## முதல்வன்

## கலை

## விஜய் –நாளைய தீர்ப்பு



10

# கல்கி

14.1.2007





**நா**ன் பொறந்து வளர்ந்ததெல்லாம் கீழ மாத்தூர்ங்கிற கிராமத்துலதான். பள்ளிக்கொடத்துக்குப் பக்கத்துல மண்சொவர் வீடு. நாங்க அஞ்சுபேர்; நாலு பசங்க, ஒரு பொண்ணு. அப்பா வாத்தியார். ஊர்ப்பசங்ககூட சேர்ந்து ஒரு பண்டிகையைப் பாக்கி வக்கிறதில்ல.

பொங்கலுக்கு ஒரு வாரம் இருக்கப் பவே ஊர் அமளிதுமளிப்படும். எல்லா வீடுகளிலேயும் மொதல் வெவகாரமா சுவர்களுக்குச் செம்மண் பூசுவாங்க. நாங்களும் (சகோதரர்கள்) செம்மண் கொண்டு வந்து கட்டாணி மொட்டாணியுமா இருக்கிற எங்க வீட்டுச் சுவத்த பாட்டிக்குப் பௌடர் போட்ட மாதிரி ஆக்கிப்புடுவோம். இந்தக் கச்சேரி முடியவும் போகி வரவும் சரியாயிருக்கும்.

போகி வந்தா எங்க அப்பாவுக்குப் புத்துணர்ச்சி பிறந்திடும். ஏன்னா அப்பத்தானே எங்க பம்பரக் கட்டை, பிலிம் பிட்டு, தீப்பெட்டி அட்டை, கோலிகுண்டுகள் எல்லாத்தையும் நெருப்புல போடலாம். வீட்டுல எலித்தொல்லைக்கு எங்க விளையாட்டுச் சாமான்தான் காரணம்கிறதுல அவர் தீர்மானமா இருப்பார். போகி முடிஞ்சு பொங்கல். எங்க ஊர்க் காவல் தெய்வம் முனியாண்டி. நாலு எல்லையிலும் ஊர்கூடி பொங்கல் வைக்கிற அழகே அழகு. சாமி கும்பிட்டு, சின்னச் சின்ன இலையில அப்ப வச்சுத் தந்த அந்தப் பொங்கல்ல இருந்த ருசிய இன்னி வரைக்கும் நாக்கு மறக்க மாட்டங்குது.

மறுநா மாட்டுப்பொங்கல் அன்னிக்கு சல்லிக்கட்டு நடக்கும். உடனே அலங்காநல்லூர் மாதிரி கற்பனை பண்ணிக்கா தீங்க. அஞ்சாறு காளைகளைத் (கன்னுக்குட்டி ரேஞ்சில்) தயார் பண்ணி, வண்ணந்தடவி தெருவில ஓடவிட்டு வாலை நாலு முறுக்கு முறுக்குவோம். கன்னுக்குட்டி மிரளுறதோட தெருப் பொண்ணுகளும் மிரளுறத பாக்கிறதுல ஒரு வாலிப சந்தோஷம்.

# பொங்கீடும்

போட்டிகள் வைப்பாங்க. என் பாடி கண்டிஷன் கருதியோ, வாத்தியார் பையங்கிறதுனாலயோ எனக்கு எப்பவும் ரெப்ரி வேலைதான் கொடுப்பாங்க.

பொங்கலுங்கிறது கிராமிய விழா.

கிராமம் தன்னைச் சோம்பல் முறித்துக் கொண்டு அறுவடைக்குத் தயாராகும் தருணம்.





பொங்கல் தினத்தன்றுதான் புதுத் துணி, புது அரிசி படையல், கரும்பு நடல், பகுத்துண்ணுதல் எனக் கிராம மக்கள் தங்களது புதிய கணக்கைத் துவக்குகிறார்கள்.

# நினைவுகள்...

## பட்டிமன்றப் பேச்சாளர் ராஜா

எனது அந்த இளம்பிராயத்துக் கிராமத்துப் பொங்கல் நாட்களை - ஒவ்வொரு பொங்கலின்போதும்- நினைவின் அடுக்கிலிருந்து எடுத்துத் தூசு தட்டிப் பார்த்துப் பரவசமடைகிறேன்.

தொகுப்பு: **மனோன்மணி**
படம்: **ஸ்ரீஹரி**






**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்**
**எம். மோகன், ச. கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.







'வறுவன் சினம்'னு ஊரு. அங்க ஒரு ராசா இருந்தாரு. அவரு தன்னோட அரண்மனைக்குத் துணி தொவைக்க ஒரு வண்ணான ஏற்பாடு செஞ்சிருந்தாரு. அந்த வண்ணான எல்லாரும் 'ராசு வண்ணான்'னுதான் சொல்லுவாங்க. கல்யாணமாகி ரொம்ப காலமாகியும் புள்ளகுட்டி இல்லாததால அவரு கோயில் குளம்னு அலைஞ்சுகிட்டேயிருந்தாரு.

ஒரு நாளு ஆத்துல துணி தொவைச்சிட்டிருக்கும்போது ஆத்தோரமிருந்த மரத்தடியில ஒரு பச்சப்புள்ள அழுகுற சத்தம். சத்தத்தக் கேட்டு ராச வண்ணானும், அவரு பொண்டாட்டியும் ஓடிப்போய்ப் பார்த்தா, கண்ணுக்கு எட்டின தொலைவு வரைக்கும் ஈங் குஞ்சைக்கூட காணல. ஆனா, பட்டுத் துணியில சுத்தி சாமியாட்டம் ஒரு கொழந்த!

ரொம்ப நாளா கொழந்த இல்லாம கோயில் கொளம்னு சுத்தினதுக்கு, கடவுளா கொடுத்த புள்ளைன்னு சொல்லி ராசவண்ணானோட பொண்டாட்டி கொழந்தய வீட்டுக்குத் தூக்கிட்டு வந்துட்டா. புள்ளகலி தீர்க்கக் கெடச்ச புள்ள இல்லியா... பொன்னப் போல, பூவப்போல புள்ளய பொத்திப் பொத்தி வளர்த்தாக ராச வண்ணானும் அவரு பொண்டாட்டியும்.

இந்தப் புள்ளைக்கு நாலு வயசான போது ராணிக்கு தேவலோகத்து ரம்பா மாதிரி ஒரு பொண் கொழந்த பொறந்துச்சு. இவங்க ரெண்டு பேரும் வளர்ந்து எளவட்ட பிள்ளையானாங்க.

அப்ப ஒரு நாளு ராச வண்ணானுக்கு சொகமில்ல, அரண்மனைக்குத் துணி எடுக்கப் போக ஆளில்ல. ராசவண்ணான் தம் பையனப் போகச் சொன்னாரு. பையனும் போனாரு. அங்க போனவரு துணி எடுக்கும்போது ராசா மகள எப்படியோ பார்த்துட்டான்; அந்தப் பொண்ணும் இவனப் பாத்திருச்சு.

பார்த்த நிமிஷத்துல ரெண்டு என வட்டத்துக்குள்ளேயும் என்னமோ ஆயிருச்சு. அதுக்கப்புறம் சும்மா இருக்க விடுமா மனசு... அடிக்கடி அரண்மனைக்குத் துணி எடுக்கவும், திரும்பக் கொடுக்கவும் போக ஆரம்பிச்சான், ராச

இது புதுசு

வண்ணானோட புள்ள.

அந்தப் பொண்ணு மட்டும் எப்படி சும்மா இருக்கும்? ஒரு நாள் ரொம்ப தைரியமா வந்து 'நீ என்னயக் கல்யாணம் பண்ணிக்கிறயா'னு கேட்டுடுச்சு. பொண்ணே கேட்டதுக்கப்புறம் வீரம் வந்து இவனும் 'சரி'ன்னு ரொம்ப வேகமாச் சொல்லிட்டான். சொன்னவன், ஒரு நாள் பார்த்து பூக்கெட்டிப் பண்டாரம் மாதிரி வேசமெல்லாம் கட்டி அரண்மனைக்குப் போயி, அரண்மனை நந்தவனம் வழியா ராசா மகளக் கூட்டிக்கிட்டுப் போயிட்டான்.

ரொம்ப நேரம் கழிச்சுத்தான் ராசாவுக்குச் சேதி தெரிஞ்சது. சேதி தெரிஞ்சு, கொந்தளிச்சுப் போன ராசா உடனே அங்கிருந்த வீரங்ககிட்ட 'அந்த ஓடு



# ஜனங்களின் சாமி

## தெக்கத்திச் சிறு தெய்வங்களின் வரலாற்றுக் கதைகள்



காலியையும் வண்ணான் மகனையும் எங்கிருந்தாலும் கண்டுபிடிச்சுக் கொன்னு போடுங்க'னு உத்தரவு போட்டாரு. இந்த வீரன்களும் அவங்க ரெண்டு பேரையும் நாலா திக்கிலும் தேடுனாங்க.

இந்த ராசவண்ணான் காதலியை 'மேலநீலித நல்லூரு'ல ஆளுசரத்துக்கு வளந்து நின்ன நாணல் புல்லுக்குள்ள ஒளிச்சு வச்சுட்டு,



## வெளியப்ப சாஸ்தா

திருநெல்வேலி மாவட்டத்தில் மேலநீலிதநல்லூர் என்ற ஊரில் உள்ளது வெளியப்ப சாஸ்தா கோவில். ஆண்டுதோறும் மகாசிவராத்திரி அன்று இக்கோயிலில் திருவிழா கொண்டாடப்படுகிறது. இது தவிர, ஒவ்வோர் ஆண்டும் மாசிமாதம் மாசிப்படைப்பு அன்றும் ஒரு விழா கொண்டாடப்படுகிறது.

திருநெல்வேலி மாவட்டத்தில், ஊத்து மலை, சொக்கம்பட்டி, நெற்கட்டும் செவல், தலைவன்கோட்டை, நீலிதநல்லூர், வன்னிக்கோனேந்தல், மூவிருந்தாளி, கோவிலான்குளம், நடுவக்குறிச்சி, இலந்தைக் குளம், கழுநீர்க்குளம் போன்ற ஊர்களில் வசித்துவருகின்ற தேவர் சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் சிலரின் குலதெய்வமாக இச்சிறுதெய்வம் திகழ்கிறது.

ஏராளமான பீடங்கள் நிறைந்த இந்தக் கோயில் வளாகத்துக்குள் சின்னச் சின்ன சாமி சிலைகள் பல உள்ளன. அச்சாமிகளுக்குப் பின்னாலும் கதைகள் உள்ளன. அச்சாமிகளில் ஒவ்வொன்றையும் ஒவ்வோர் ஊர்க்காரர்கள் வழிபடுகின்றார்கள்.

சங்கரன்கோவிலில் இருந்து திருநெல்வேலி செல்லும் சாலையில் மேல நீலிதநல்லூருக்கும் குருக்கள்பட்டிக்கும் இடையில் இக்கோயில் உள்ளது. பழங்காலத்தில் இப்பகுதியில் வாழ்ந்த மக்கள் இங்கு நிலவும் வறட்சியால் இங்கு தொடர்ந்து வாழ இயலாத சூழ்நிலையில் தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் திருநெல்வேலி மாவட்டத்தின் சில பகுதிகளுக்கும் ஓரிருவர் சிங்கப்பூர் போன்ற அயல் நாடுகளுக்கும் சென்று குடியேறி உள்ளனர்.

பக்கத்துல இருந்த 'குருக்கள்பட்டி'க்கு 'சாப்பிடறதுக்கு ஏதாவது வாங்கிட்டு வரன்'னு போயிட்டான். அப்ப, அங்க தேடி அலைஞ்சுகிட்டுயிருந்த வீரங்க நாணல் பொதருக்குள்ள இருந்த ராசா மகளோட சேலத்துணியப் பாத்துட்டாக. 'சரி பொதருக்குள்ள ரெண்டு பேரும்தான் இருப்பாங்க'னு நெனச்சிட்டு பாவிக, பொதருக்குத் தீவச்சுட்டாக. நாணல் பொதரு எரியறதப் பார்த்த வண்ணான் மகன் அலறி அடிச்சிட்டு, அவள எப்படியாவது காப்பாத்தணும்னு ஓடோடி வந்தான். ஆனா இந்த அரண்மனை வீரங்க அவன்கிட்ட சண்டப்போட ஆரம்பிச்சாங்க. தெய்வாம்சம் பொருந்துன நம்ம ராசவண்ணான் மகன் வீரமா சண்டப்போட்டு, அரண்மன வீரங்க செத்து மடிஞ்சாக. சின்ன தீக்கூட படாம, பொண்ணைக் காப்பாத்திட்டாரு.

அத்தன வீரங்களையும் தோக்கடிச்சது ராசவண்ணான் மகனில்ல; சிவபெருமானோட தெய்வ அம்சமான வெளியப்பர்தான். அவரோட வீரமும், தீரமும்தான் அத்தன வீரங்களையும் மண்ணாக்கிடுச்சுன்னு சரியா புரிஞ்சு தெளிஞ்ச ராசா, தன் பொண்ண சிவஞான வெளியப்பருக்கே கல்யாணம் செஞ்சு வைச்சாரு.

வெளியப்பருகிட்ட, புஷ்கரணிங்கிற ஊரணியோட காவல்சாமி புஷ்கலிகாம்பிகை, தன்னையும் கல்யாணம் செஞ்சுக்கணும்னு கேட்க, வெளியப்பரு அவங்களையும் ஆட்கொண்டு அந்தப் பொண்ணோட சாபத்துக்கு விமோசனம் கொடுத்தார். பூரணி புஷ்கராம்பிகை சமேத சிவஞான வெளியப்பராக அருள் செய்யுறார் என்று சிவஞான வெளியப்ப சாஸ்தாவின் வரலாற்றைச் சொன்னார் ஊத்துமலையைச் சேர்ந்த எண்பது வயதான வித்வான் தங்கபாண்டியன்.

(தொடரும்)



சோ

எழுதிய

# மஹாபாரதம்

இரண்டு பாகங்கள்

பாரதக் கதை பழமை வாய்ந்தது. ஆனால் அதை எழுதியிருக்கும் விதம் மிகவும் புதுமையானது. 1304 பக்கங்களில்; வியாச பாரதத்தின் சுருக்கம்; 18 பர்வங்களில் வரும் முக்கிய நிகழ்ச்சிகள்; பாரதக் கதை நடந்திருக்கக்கூடும் என்பதற்கான வழக்கறிஞர் 'சோ'வின் ஆணித்தரமான வாதம்; பலரும் கேட்டிராத நுணுக்கமான அரிய தகவல்களை விளக்கி; முக்கிய இடங்களில் பாரத நிகழ்ச்சிகளையும், கதாபாத்திரங்களையும் விமர்சித்து, இன்றைய நிகழ்வுகளோடு ஒப்பிட்டுக் கூறியிருக்கும் விதம் புதுமையானது.

இரண்டு பாகங்கள் - விலை ரூ.600/-

# ஹிந்து மஹா சமுத்திரம்

வேதங்கள், உபநிஷத்துக்கள், வேதாந்தம், சாத்திரம், புராணங்கள், ஆலயங்கள், பக்தி, சரித்திரம், நீதி, சட்டம், சமூக சிந்தனை, விஞ்ஞானம், கணிதம், இலக்கியம், வான சாத்திரம் என்று விரிந்து... ஆழ்ந்து, அகன்ற இந்த சமுத்திரத்தை அதன் கரையோரத்தில் நின்று பார்த்தவரின் பிரமிப்பு!

முதல் பாகம் விலை. ரூ.175/-

# வால்மீகி ராமாயணம்

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட ராமாயணம் எனும் இதிஹாசத்தை - சுருக்கமாகவும், மிகவும் எளிய நடையிலும் சோ அவர்கள் எழுதியுள்ளார். மேலும் சில முக்கியமான இடங்களில் வால்மீகி ராமாயணம் - கம்ப ராமாயணம் மற்றும் துளசிதாஸரின் ராமாயணங்களை விட எப்படி வேறுபட்டுள்ளது என்பதையும், அப்படி விளக்கும் போது ஆங்காங்கே கம்பரின் வாக்கியத்தினுள்ள தமிழ் அழகையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

விலை ரூ.500/-

## இந்து தர்மம்

காஞ்சி காமகோடி பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் அருளுரைகளின் சுருக்கம்.

விலை ரூ.60/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்

ராஜாஜி, மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி, சந்திரசேகர், அத்வானி, காமராஜ், அண்ணாதுரை, எம்.ஜி.ஆர், கருணாநிதி, என்.டி.ஆர்., ஜெயலலிதா போன்ற ஏராளமான அரசியல் தலைவர்கள், மற்றும் சினிமா, பத்திரிகைப் பிரமுகர்களுடன் தனக்கு ஏற்பட்ட அனுபவங்களை விளக்கியுள்ளார் விலை ரூ.90/-

## கருத்தாழம் மிக்க நகைச்சுவை நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | எங்கே பிராமணன்? | 100.00 |
| 2. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 35.00 |
| 3. | இந்து தர்மம் | 65.00 |
| 4. | வந்தே மாதரம் | 115.00 |
| 5. | வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 6. | சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 7. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 8. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 45.00 |
| 9. | கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 27.00 |
| 10. | துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 11. | அதிகப் பிரசங்கம் | 32.00 |
| 12. | இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | |
| 13. | யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 14. | சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 15. | மைடியர் பிரம்ம தேவா | 30.00 |
| 16. | இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 17. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 1 | 24.00 |
| 18. | துக்ளக் கேள்வி - பதில் பாகம் 2 | 45.00 |
| 19. | ஒண்ணரை பக்க நாளேடு பாகம் 1 | 40.00 |
| 20. | காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 21. | புரட்சி கீதை | 35.00 |
| 22. | திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 23. | யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 24. | சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 25. | எங்கே போகிறாய்? | 40.00 |
| 26. | என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 27. | இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 28. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 29. | சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 30. | சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 31. | ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 32. | நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 33. | மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 34. | ஏன் கூடாது? | 40.00 |
| 35. | இரவில் சென்னை | 40.00 |
| 36. | முகமது பின்துக்ளக் | 35.00 |
| 37. | உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 38. | சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 39. | எதற்காக? | 35.00 |
| 40. | உண்மையே உன் விலை என்ன? | 37.00 |
| 41. | துக்ளக் தலையங்கங்கள் | 25.00 |

சிறப்பு தள்ளுபடி

சென்னை புத்தகக் கண்காட்சியிலும்; (10.1.2007 -21.01.2007)

துக்ளக் ஆண்டு விழாவிலும் 14.1.07 (காமராஜ் அரங்கில்)

10%

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

அல்லயன்ஸ்

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,
சென்னை - 4. தொலைபேசி : 24641314
e-mail : www.alliancebook.com
visit us at: Srinivasan@alliancebook.com



டாப் டென் டீ.வி. தொடர்களில் டாப்பில் இருக்கும் அரை டஜன் அம்சங்களை அலசிப் பார்த்தபோது உருவான சார்ட் இது..! சீரியல்களுக்குச் சோகத்திடமிருந்தும் பெண்களுக்கு சீரியல்களிடமிருந்தும் விடுதலை பிறக்குமா...? இத்தொடர்களை உருவாக்குவோர், ஒளிபரப்புவோர், விளம்பர ஆதரவு தருவோர் என அனைத்துத் தரப்பினருடனும் விவாதிக்கக் காத்திருக்கிறது கல்கி. நீங்களும் சேர்ந்து கொள்ளுங்கள் - உங்கள் கருத்துகள், ஆலோசனைகளை அஞ்சல் அட்டையில் எழுதி ஜனவரி 18-க்குள் கிடைக்கும்படி கல்கி அலுவலக முகவரிக்கு அனுப்புங்கள். முகவரி பகுதியில் 'சீரியல் சீர்திருத்தம்' என்று தவறாமல் குறிப்பிடவும்.

| தொடர்கள் | திருமண பந்தத்துக்கு அப்பாற்பட்ட உறவு | பெண்ணே பெண்ணுக்கு எதிரி! | 'தியாகம்' என்ற பெயரில் தங்களையே அழித்துக் கொள்ளும் பெண்கள் | மாமியார் கொடுமை | பிழியப் பிழிய சோகம் | இழுவையான இறுதிச் சடங்கு காட்சிகள் |
|---|---|---|---|---|---|---|
| கோலங்கள் | - | - | ✓ | ✓ | ✓ | ✓ |
| கல்கி | ✓ | ✓ | ✓ | - | ✓ | ✓ |
| அஞ்சலி | ✓ | - | - | - | ✓ | - |
| செல்லமடி நீயெனக்கு | ✓ | - | ✓ | - | ✓ | - |
| நிம்மதி | - | - | ✓ | - | ✓ | ✓ |
| சொர்க்கம் | ✓ | ✓ | - | - | ✓ | ✓ |
| ஆனந்தம் | ✓ | - | ✓ | - | ✓ | ✓ |
| லட்சுமி | - | - | ✓ | - | ✓ | - |
| கனாக்காணும் காலங்கள் | - | - | ✓ | - | ✓ | - |
| மலர்கள் | ✓ | - | ✓ | ✓ | ✓ | ✓ |

# 'டாப்'பில் இருக்கும் சோகம்!













# விஜய் -நாளைய தீர்ப்பு

**விஜய் அப்பா சந்திரசேகர் என்று சொல்வதில் பெருமையா? சந்திரசேகர் மகன் விஜய் என்பதில் பெருமையா?** என்று முதல் கேள்வியிலேயே பொடி தூவி ஆரம்பித்தோம். ஆனால் விஜய் அப்பா எந்த நெடிக்கும் ஆளாகாமல்,

எல்லா அப்பாக்களுக்கும் தன் மகன் வெற்றியின் உச்சத்துக்குப் போவதைப் பார்க்க ஆசையிருக்கும், கனவிருக்கும். அந்த ஆசைக்கும், கனவுக்கும்தானே தன் வியர்வையையும், உழைப்பையும், நம்பிக்கையையும் ஓர் அப்பா சளைக்காமல் கொடுக்கிறார். அப்படியொரு சாதாரண அப்பாதான் நான். அந்த வகையில் விஜய்யின் அப்பா சந்திரசேகர் என்று சொல்வதில்தான் கொள்ளைப் பெருமை எனக்கு.

**ஓர் இயக்குநராக இருந்து நீங்கள் விஜய்யை அறிமுகப்படுத்திய போது இத்தனை பெரிய நடிகராக அவர் வருவாரென்று நீங்கள் எதிர் பார்த்தீர்களா?**

நான் ஒருவரை அறிமுகப்படுத்துகிறேன் என்றால் அவர் மீது நம்பிக்கையின்றி எப்படி அவரை வைத்து இயக்க முடியும்? விஜய்யையும் நான் அதீதமாக நம்பினேன். அதனால்தான் அந்தப் படத்துக்கு 'நாளைய தீர்ப்பு'னு நம்பிக்கையாக டைட்டிலும் வைத்தேன்.

**விஜய்க்குப் போட்டி 'இவர்', 'அவர்' என்று எழும் கருத்துகளை எப்படிப் பார்க்கிறீர்கள்?**

ஜெயிக்கணும் என்கிற வெறியும், உழைப்பும் எல்லார் கிட்டயும் இருக்கு. அனைவரும் தங்களை ஏதோ ஒரு விதத்தில் நிருபித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். ரேஸில் ஓடுற குதிரை மாதிரிதான் வாழ்க்கை என்பதை எல்லாருமே புரிந்து வைத்திருக்கிறார்கள். அதனால் இந்தப் 'போட்டி'ங்கிற போலியை நான் பெரிதாக

எடுத்துக் கொள்வதில்லை.

**விஜய் இப்போ ஒரே மாதிரியான கதையம்சம் உள்ள படங்களில் நடிச்சுட்டு இருக்காரே, ஒரு டைரக்டரா நீங்கள் அட்வைஸ் பண்ணக் கூடாதா?**

ஒவ்வொருத்தருக்கும் ஒரு ஸ்டைல் இருக்கு; பாணி இருக்கு. விஜய்க்குனு ஒரு ஸ்டைல் உருவாகிவிட்டது. அதை மக்களும் ரசிகர்களும் ஏற்றுக்கொண்டதனாலாதானே படம் ஓடுகிறது. நான் ஏன் அதை டிஸ்டர்ப் பண்ணனும்?

**புது இயக்குநர்கள்கூட பெரிய ஹீரோவை வைச்சுப் படம் பண்ணும் போது, நீங்க மட்டும் இன்னும் புது முகங்களையே நம்புறீங்களே, ஏன்?**

ஹிட் கொடுத்தவர்களை வைத்து மீண்டும் 'ஹிட்' கொடுப்பதா திறமை? ஜெயிச்ச குதிரை மேல் சவாரி பண்ணுவதில் என்ன சாதனை? வளரும் நடிகன் பேசப் படுற அளவுக்கு அவனுடைய நடிப்பின் பரிமாணத்தை மிளிரச் செய்வதுதானே திறமை! அந்தத் திறமையின் மேல் எனக்கு நம்பிக்கை இருப்பதால்தான், புதுமுகங்களை நான் நம்புகிறேன். விஜயகாந்த் வளர்ச்சியில் நானும் ஒரு காரணம், சிம்ரனை ஒன்ஸ்மோரில் அறிமுகப் படுத்தினேன்; 'நிலவே மலரே'வில் ரகுமானை அறிமுகப் படுத்தினேன்; விஜய்யை அறிமுகப்படுத்தினேன். இன்னைக்கு இவங்க எல்லாமே சிகரத்தைத் தொட்டவர்கள்.



**வாரிசு அரசியல் மாதிரி, வாரிசு சினிமா ஆரோக்கியமான போக்கா?**

ஒரு டாக்டரோட வாரிசு, டாக்டராகலாம், ஒரு வக்கீலோட வாரிசு வக்கீலாகலாம். ஆனா ஒரு சினிமாக்காரரின் வாரிசு, சினிமாவுக்கு வருவதில் என்ன இழப்பு? வாரிசாக வந்தாலும் திறமை இருந்தால் தானே ஜெயிக்க முடியும்?

**போக்கிரிப் படத்தைப் பத்தி...**

தெலுங்குல ஹிட் கொடுத்திருக்கார் பிரபுதேவா. நிச்சயமா 'போக்கிரி' தமிழ் சினிமா வசூல் வரலாற்றிலும் பெரிதாகப் பேசப்படும்.

சந்திப்பு: **முத்துக்குமார்**
படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**





சென்னையின் சீமாட்டிகளாகக் கண் சிமிட்டுகின்றன- 'மால்' எனப்படும் காஸ்ட்லி ஷாப்பிங் சென்டர்கள். இங்கே கிடைக்காததே கிடையாது. ஆனால் நூறு ரூபாய்க்கு ஏதாவது கிடைக்குமா? தெரிந்துகொள்ள நிகிலா, அபிநயா, ரஞ்சனி மூவரும் ஆஜரான இடம் அபிராமி மால்.

ஏற்கெனவே களை கட்டியிருந்த மால் இவர்கள் போனதும் இன்னும் ஜரூராகிறது.

மூவரின் பார்வைக்கும் முதல் இலக்கானது முதல் தளத்தில் இருந்த ஆக்சசரிஸ் ஷாப். உற்சாகமான கடை ஓனர் "வாங்கம்மா, வாங்க" எனச் சொல்ல "ஹலோ சார், நாங்க காலேஜ் ஸ்டூடன்ட்டுங்க. அம்மா, பாட்டின்னு கூப்பிட்டு எங்களை காலி பண்ணிடாதீங்க" என்று நிகிலா தமாஷ் செய்ய,

"சாரி பேபிகளே... உள்ளே வாங்க! எந்த காலேஜ் பேபிக்களுக்கு?" என்று தன் பங்குக்கு ஆரம்பிக்க "அட! அப்படிப் போடுங்க!"

"வெங்கடேஸ்வரா என்ஜினியரிங் காலேஜ் ஸ்டூடண்ட் நாங்க" என்கிறார் ரஞ்சனி.

செலக்ஷன் ஆரம்பமாகிறது. தோடு வளையல் செட்கள், கழுத்துச் செயின்கள், காது விரல் வளையங்கள் என ஆளுக்கு ஒன்றாக எடுத்து வைத்து அழகு பார்க்க, நிகிலா "இது சூப்பரா இருக்குடி" என்று பெரிதாகச் சத்தமிடுகிறார்.

அபிநயா "ஏய் கத்தாத! விலையைப் பாரு. பட்ஜெட் மேட்டர் ஞாபகமிருக்கில்ல. அதுல துண்டுவிழுந்து உன் கையும் துண்டாயிடும்" என்று அதட்ட, "ஹாய் சும்மா அவளை டார்ச்சர் பண்ணாத ஏதோ ஆர்வத்துல சொல்லிட்டா என ரஞ்சனி சப்போர்ட் பண்ண, கடை ஓனரின் முகம் இலேசாக இருள ஆரம்பிக்கிறது.

எல்லா வகையான ஐட்டங்களையும் எடுத்துப் பார்த்துப் போட்டுவிட்டு "வரும் போது வாங்கிக்கிறோம் சார்" என்று சொல்லி மூவரும் கிளம்ப,

"எல்லா கஸ்டமருங்க மாதிரியே இதுங்களும் பண்ணுதுங்கப்பா" என்றபடி "சரி சரி, எல்லாத்தையும் இருந்த இடத்துலேயே வைங்கம்மா" என்கிறார் கடைப் பெண்ணிடம்.

கடைக்காரரின் கோபத்தைக் கிளறிய மூவரும் பொம்மைக் கடைக்குள் நுழைகின்றனர். மேல் அடுக்கில் உள்ள அந்த

# மயக்கும்

குறிப்பிட்ட பொம்மையை எடுக்க, அவற்றுடன் கொஞ்சிக் கூத்தாடி போட்டோ எடுப்பதற்குப் போஸ் கொடுத்து விட்டு விலையைப் பார்க்கிறார்கள். ரூ.270/- மூவரும் கடையைவிட்டு அப்பீட்!

அடுத்து, ரெடிமேட் கடை. வரிசையாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ரெடிமேட் செக்‌ஷனில் புகுந்த உடனேயே இங்கயாவது பர்ச்சேஸ் பண்ணமுடியுமா; முடியாதா என்று ஏக்கமாக ரஞ்சனி கேட்க, நிகிலாவும் அபிநயாவும் அவரை ஒரு முறை முறைத்து, செலக்‌ஷனில் ஈடுபட ஆரம்பிக்கிறார்கள்.

ஒவ்வொரு டிரஸ்ஸாக தனக்குப் பொருந்துகிறதா என்று வைத்து வைத்துப் பார்த்த நிகிலா, "ஏய் டிரஸ்ஸிங் ரூம் போய்ப் போட்டுப் பார்க்கவா?" என்று கேட்க,

"ஒண்ணும் வேணாம். இதுக்கே நேரம் இவ்வளவு ஆயிடிச்சு. நீ டிரஸ்ஸிங் ரூம் போனே... அவ்வளவுதான்" என்று ரஞ்சனி சிணுங்க,

நிகிலாவுக்கு ரொம்பப் பிடிச்ச டிரஸ், பட்ஜெட்டை மீற, அபிநயாவுக்குப் பிடிச்சது பட்ஜெட்டுக்கு ரொம்பக் குறைவாக வர, இறுதியில் தேர்வானவைதான் குர்த்தாவும் துப்பட்டாவும்.

குர்த்தா - 199 ரூபாய், துப்பட்டா 99 ரூபாய். மூன்று பேருக்குமாகச் சேர்த்து இரண்டு ஐட்டங்கள்தான்! இரண்டு ரூபாய்தான் மீதம். "நாங்க ஜமாய்ச்சுட்டோம்ல" என்று மூவர் போட்ட சப்தத்துக்குக் கடைப் பணியாளர்கள் காதுகளைப் பொத்த வேண்டியிருந்தது. வெளியில் வந்து மூவரும் பாப்கார்ன் பொட்டலங்களுடன் நடைபோட ஆரம்பித்தனர்.

"ஆக இந்த மாதிரி பெரிய மால்கள்ல பர்சேஸ் பண்ண குறைந்த பட்சம் ஒருத்தருக்கு முன்னூறு ரூபா வேண்டும்" அப்போ பெரிய லெவலில் ஒரு குடும்பத்துக்கே ஷாப்பிங் பண்ண... ஐயோ கட்டுக் கட்டா வேணுமா கரன்சி?" என்று நிகிலா வாய் பிளக்க,

"கண்டுபிடிச்சுட்டாடி - யாரும் சொல்லாத ஒரு விஷயத்தை?! மால்கள் கரன்சியைப் பற்றிக் கவலைப்படாதவர்கள் ஷாப்பிங் பண்ற இடம், ஆனா பொருட்கள் எல்லாம் குவாலிட்டியா, இருக்குது; கொஞ்சம் காஸ்ட்லியாவும் இருக்குது" என்று ரஞ்சனி எகனாமிக்ஸ் க்ளாஸ் எடுக்க, நிகிலாவும், அபிநயாவும் துரத்த ஆரம்பிக்கிறார்கள்.

தொகுப்பு : **அருண்மணி**

அட்டை, படங்கள் : **ஸ்ரீஹரி**






# கல்கி



2007 ஜனவரி 14
விய மார்கழி 30
மலர் : 65
இதழ் : 24


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## நொய்டா பயங்கரம்!

நொய்டா கொலைகள் பயங்கரமும் அதிர்ச்சியுமூட்டுபவை எனில் அவற்றைக் குறித்து முலாயம் சிங் யாதவ்வும் பா.ஜ.க. வினரும் மோதுவது அருவருப்பும் ஆற்றாமையும் ஏற்படுத்துகிறது. பா.ஜ.க. ஆட்சியின்போது மாதாமாதம் எத்தனை கொலைகள் நடந்தன என்று கணக்கு ஒப்பித்து, அதை ஒப்பு நோக்க தமது ஆட்சி எவ்வளவோ மேல் என்று நிரூபிக்க முயன்று கொண்டிருக்கிறார் உ.பி. முதல்வர்!

இந்த அபத்தங்களுக்கு உடனடியாக முடிவு கட்டி அரசும் நீதி அமைப்பும் இணைந்து இயங்க வேண்டும். திட்டமிட்டுக் கொலைகளை நிகழ்த்தியுள்ளவர்களைக் காலந் தாழ்த்தாமல் விசாரணைக்குட்படுத்தி உரிய தண்டனையை நிறைவேற்றவேண்டும்.

மரணதண்டனை என்கிற உச்சபட்ச தண்டனை அமலில் இருக்கிறபோதே இவ்வளவு திட்டமிட்ட கொடூரங்கள் நடக்கின்றன; இன்னும் அத்தண்டனை முறை ரத்தாகிவிட்டால் என்னதான் நேராது!

நொய்டா, நித்தாரி கிராமத்து மோனிந்தர்சிங், அவனது வேலையாள் சுரேந்தர் ஆகிய இருவரும் ஒன்பது குழந்தைகளைப் பாலியல் பலாத்காரம் செய்து கொன்றதாக ஒப்புக் கொண்டுள்ளனர். ஆனால் காவல் துறையினர் பதினைந்து மண்டை ஓடுகளை மோனிந்தர் வீட்டுச் சாக்கடையில் கண்டெடுத்துள்ளனர்! இப்பகுதியில் கடந்த இரண்டு ஆண்டுகளாகக் காணாமல் போனதாகக் கூறப்படும் குழந்தைகளின் எண்ணிக்கையோ முப்பது! போதாக்குறைக்கு, தங்கள் குழந்தைகளைக் காணவில்லை என்று முறையிட்ட பல பெற்றோரின் புகார்களைக் காவல் துறையினர் பதிவு செய்ய மறுத்தும் தாமதம் காட்டியும் உள்ளனர்!

ஆக, எளிய மக்களின் அறியாமையும் இயலாமையும் மட்டு

நொய்டா காவல் நிலையம்




மின்றி காவல் துறையின் அலட்சியமும் நிர்வாக இயந்திரத்தின் மெத்தனமும் மோனிந்தர் போன்ற பகிரங்க குற்றவாளிகளுக்குச் சாதகமாக அமைந்துவிடுகின்றன.

குழந்தைகளின் உறுப்புகள் மாற்று அறுவை சிகிச்சைக்காக விற்கப்பட்டிருக்கலாம் என்ற சந்தேகமும் எழுந்துள்ள நிலையில், உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி பாலகிருஷ்ணன், இவ்வழக்கு காவல் துறையின் முழுமையான விசாரணைக்கு உட்படுத்தப்பட வேண்டும் என்று அறிவித்திருப்பதும் தேசிய மனித உரிமைக் கழகம் உ.பி. அரசிடம் விளக்கம் கேட்டிருப்பதும் பொறுப்புள்ள நடவடிக்கைகள் ஆகும் என்ற போதிலும், நாடெங்கும் உள்ள பெற்றோரின் பொறுப்பும் விழிப்புணர்வும் இவற்றைவிடவும் முக்கியமானவையாகின்றன.

குழந்தைகளின் உடல், மன, கல்வி வளங்களோடு அவர்களுடைய பாதுகாப்பையும் பேண வேண்டிய பொறுப்பு பெற்றோருக்கு இன்று அதிகரித்துள்ளது. கட்டவிழ்ந்த பாலியல் உணர்வுகளை, பொறுப்பின்றி மீண்டும் மீண்டும் சித்திரித்தும் தூண்டியும் வியாபாரம் செய்கின்ற மீடியாவின் தாக்கத்தினால் பாலியல் வக்கிரங்கள் அதிகரித்துவிட்டன. அங்கொன்று இங்கொன்று என்கிற நிலை மோசமாகி நாடு முழுவதும் மண்டிக் காணப்படுகின்றன. இந்த வக்கிரங்களின் வடிகால்களாகக் குழந்தைகளைப் பயன்படுத்திக் கொள்வது எளிது. அச்சமும் அவலமும் குற்ற உணர்வும் அவர்களை மௌனம் காக்கச் செய்யும் என்பதுடன் அவர்களை மிரட்டி பிளாக் மெயில் செய்வதும் எளிது.

இத்தகைய நிகழ்வுகள் குறித்து விரிவாக விளக்கி குழந்தைகளின் மனத்தில் பீதியூட்டுவதும் ஆபத்தாகிவிடும்.

இதையெல்லாம் உணர்ந்துதான் 'துளிர்' போன்ற அமைப்புகள் குழந்தைகளைப் பலிகொள்ளும் பாலியல் குற்றங்களை எதிர்த்து விழிப்புணர்வு இயக்கம் தொடங்கியுள்ளன. குழந்தைகள் தங்களை எப்படிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பதோடு, பெற்றோர் இதுபோன்ற விஷயங்கள் குறித்து குழந்தைகளிடம் எவ்வாறு பேசி எச்சரிக்க வேண்டும் என்பதையும் மனவியல் ரீதியாக அணுகி வழிகாட்டுகின்றன.

இவ்வமைப்புகளின் வழிகாட்டலை ஏற்பதுடன் பெற்றோர் தங்கள் குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகவும் உணர்வு ரீதியாகவும் பார்த்துக் கொள்வது அவசியமாகிறது. ●





# வாரம் ஒரு பட்டுப் புடைவை!



இங்குள்ள கட்டங்களில் சமீப காலத்தில் செய்தித்தாள்களில் இடம் பிடித்த சில விளையாட்டு வீரர்கள் மற்றும் அரசியல் தலைவர்களின் பெயர்கள் எட்டு உள்ளன. இடமிருந்து வலம், வலமிருந்து இடம், மேலிருந்து கீழ், கீழிருந்து மேல், குறுக்கு நெடுக்காக உள்ளவர்களைக் கண்டுபிடித்து எழுதுங்கள். சென்னை தி.நகர் பாலம் சில்க் ஸாரீஸ் வழங்கும் ரூ.2,500 மதிப்புள்ள பட்டுப் புடைவையை வெல்லுங்கள். ஒன்றுக்கு மேற்பட்டோர் சரியான விடையளித்திருந்தால் குலுக்கல் மூலம் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.




**கடைசி தேதி : 15.1.2007**

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சா | ஷே | ன் | வா | ர் | ன் | க |
| னி | ந் | | | | ங் | |
| யா | | தி | | கு | லு | |
| மி | | | லி | | லா | |
| ர் | ச | தா | ம் | உ | சே | ன் |
| சா | | ன் | ச | ணே | க | ல் |
| ஜி | ர் | ன | பா | தா | ம் | ம |

வாரம் ஒரு பட்டுப் புடைவை - 2
கல்கி,
47- NP. ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032



பஞ்ச் டயலாக் பரிசு ரூ.2000/-

குடியரசு தலைவர் அப்துல் கலாமின் சேவைக்கு ஒரு சல்யூட் அடியுங்கள்.

இரண்டு வரி, பஞ்ச் வாசகங்களாக சிறந்த எட்டு வாசகங்களுக்குத் தலா ரூ **250/-** பரிசு.

கடைசித் தேதி **15.1.2007.**

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.



# திருத்தியமைக்கப்பட்ட தேசிய காசநோய் தடுப்புத் திட்டம், தமிழ்நாடு









- காசநோய் காற்றின் மூலம் பரவக்கூடியது.
- TB பரம்பரை வியாதியல்ல, முற்றிலும் குணப்படுத்தக் கூடியது.

  கீழ்க்கண்ட அறிகுறிகள் 3 வாரங்களுக்கு மேல் இருந்தால் இலவச பரிசோதனை மற்றும் சிகிச்சைக்கு உடனே அரசாங்க மருத்துவமனையை அணுகவும்.
- இருமல்/மாலை நேரக் காய்ச்சல்/நெஞ்சுவலி/பசியின்மை/உடல் எடைக்குறைவு
- DOTS (குறுகிய கால தொடர் சிகிச்சை) முறையில், காசநோய்க்கு 6-8 மாதம் வரை சிகிச்சை எடுத்துக் கொண்டால் TB யிலிருந்து முற்றிலும் குணமடையலாம்.
- காசநோய் வராமல் தடுக்க பிறந்த அனைத்து குழந்தைகளுக்கும் BCG போடுவீர்.
- கண்ட இடத்தில் எச்சில் துப்பாதீர்! காசநோயைப் பரப்பாதீர்.

**காசநோயை வெல்வோம்! இன்றும், என்றும்!**

பொது நலன் கருதி வெளியிடுவோர்:

மாநில காசநோய் தடுப்புச் சங்கம், சென்னை-600 006.

Visit us at: www.tn.gov.in / www.southindia.com







# இயல்பாய் வடியும் உணர்வுகள்!

சுந்தரபாண்டியன் சிறுகதைகள் - - காவ்யா சண்முக சுந்தரம், வெளியீடு - காவ்யா, சென்னை - 24, பக்கங்கள் - 480, விலை - 240.

காவ்யா சண்முகசுந்தரம், சுந்தரபாண்டியன் சிறுகதைகள் என்ற பெயரில் தமது 45 சிறுகதைகளைத் தொகுத்துள்ளார். 'ஆரிரரோ', 'வாடகை சைக்கிள்' என்று போகும் கதைகளில் அடர்த்தி அதிகம். இவை எவையும் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படாதவை என்பது குறிப்பிடத்தகுந்தது. நல்லதொரு வாசிப்பனுபவத்தைத் தரவல்ல தொகுப்பு.

நெஞ்சைத் தொட்ட நிழல் மனுஷிகள் - சுரேஷ் - பாலா விகடன் பிரசுரம், பக்கங்கள் - 130, விலை - 75.

'பெண்களின் மனதைப் படிக்கும் சர்வதேச திரைப்படங்கள்' என்ற துணைத் தலைப்போடு வெளிவந்துள்ள இந்நூல் உலகின் முக்கிய தேசங்களில் வெளிவந்துள்ள திரைப்படப் பெண் கதாபாத்திரங்களின் தன்மையை விளக்குவதாக அமைந்துள்ளது.

27 படங்களில் இடம் பெற்ற பெண் கேரக்டர்களை, அவர்களின் உணர்வுகளை மிக இயல்பாக வடித்துள்ளனர் சுரேஷ் - பாலா.

ஸ்ரீ ஹரிதாஸ விஜயம் - பத்மா ஸ்ரீநிவாஸன், பக்கங்கள் - 400, விலை. ரூ.150/-

ஸ்ரீ பேலூர் கேசவதாஸர் வம்சத்தினரிடமிருந்து உரிமை பெற்ற மொழி பெயர்ப்பு. மிகச் சிறந்த கர்நாடக ஹரிதாஸர்களின் சரித்திரத்தை, அவர்கள் தம் சமுதாய ஆன்மிக வாழ்க்கையை புனித வரலாறாகக் காட்டுகின்ற நூல். அசலானந்ததாஸர் முதல் ஸ்ரீ மொதலகல் சேஷ் தாஸர் வரையிலான 17 தாஸர்களின் ஆன்மிக வாழ்க்கைத் தொகுப்பு.

- அத்தியாயன்









*Wish you all a happy & prosperous New Year 2007*

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை

# P.R. JEWELLERY



GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)



**PROPRIETOR : P. RAVINDHIRAN**

**வாடிக்கையாளர்கள் அனைவருக்கும் பொங்கல் வாழ்த்துக்கள்!**

21வது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் நாங்கள் வாடிக்கையாளர்கள் அனைவரும் குறைந்த செலவில் பயன்பெற வருக வருக என வரவேற்கிறோம். அதிர்ஷ்ட சீனக் காசுகள். சிகப்பு ரிப்பனினால் கட்டப்பட்ட 3 ஐ சிங் காசு வைப்பதால் பண வாய்ப்புகள் பெருகும். விலை ரூபாய் 30/- வீட்டில் உள்ள அனைவரும் பாக்கெட், பர்ஸ், ஹேண்ட் பேக், சூட்கேஸ், பீரோ, பாதுகாப்பு பெட்டகம் போன்ற எல்லா இடங்களிலும் வைக்கலாம். தபாலில் பெற ரூ. 40/- M.O. அனுப்பவும்.

மேலும் எங்களிடம் பெங்சூய், சீன வாஸ்து பொருட்கள் குறைந்த விலையில் கிடைக்கும். தொங்கும் மணிகளும் காசுகளும் ரூ. 100/- பிரமீடு. ரூ. 100/- செல்வ குபேரர் ரூ. 40/- முதல்.

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் **P.R.** ஜுவல்லரிக்கு வந்து ராசிக்கல் மோதிரம் வாங்கிப் பயன்பெறுங்கள்.

ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் விலை ரூபாய் 500/-
கல்ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.





மேஷம், விருச்சிகம் - பவழம், ரிஷபம்,
துலாம் - வைரம், மிதுனம், கன்னி - மரகதபச்சை,
கடகம் - முத்து, சிம்மம் - மாணிக்கம், தனுசு,
மீனம் - புஷ்பராகம், மகரம், கும்பம் - நீலம்.



முகவரி தெளிவாக எழுதவும்.
எங்களது சிறப்புப் பேட்டியை விஜய் டீ.வி.யில்
புதன், வெள்ளி காலை 9.30 மணிக்கு காணத் தவறாதீர்கள்.







**சா**லையை மறித்தபடி அவர்கள் நின்றிருந்தார்கள் – ஆண்களும் பெண்களுமாக மரத்தைச் சுற்றி வட்டமாக. நல்ல உடுப்பை உடுத்திய பெரிய மனிதர்கள். அலுவலகத்துக்குக் கிளம்பியவர்கள் எதேச்சையாக எதைக் கண்ட அதிர்ச்சியிலோ நின்றவர்களைப் போல ஒரு சின்னக் கூட்டம் வேடிக்கை பார்த்தது. சற்று எட்டி பெங்களூரு மஹாநகர பாலிகேயின் கார்பரேஷன் வண்டி நின்றிருந்தது. திமுதிமுவென்று வந்த நூறுக்கு மேற்பட்ட வாகனங்கள் ரோட்டுக்கு வடக்கும் தெற்குமாக ஸ்தம்பித்து நின்றன. பொறுமை இழந்த ஹார்ன்கள் விடாமல் ஒலித்தன.

"இதும்மேல கை வெச்சா உங்களைச் சும்மா விடமாட்டோம்!"

கோட்டும் தொப்பியும் அணிந்த இரண்டு பேர் சமாதானக் குரலில் பேசினார்கள்.

"எங்களுக்கும் இஷ்டமில்லே ஸார். ஆனா இது வழியிலே இருக்கு. அதுவும் பஸ் ஸ்டாண்ட் எதிர. பஸ்களுக்குப் போகவர கஷ்டம்ங்கறாங்க, இதனால ட்ராஃபிக் ஜாம் ஆகுது."

"பஸ் ரூட்டை மாத்துங்க. ட்ராஃபிக்கை மாத்துங்க! இது இங்க நூறு வருஷமா நிக்கற மரம். இந்த இடம் அதுக்குத்தான் சொந்தம்."

கார்ப்பரேஷன்காரர்கள் ஏதோ முணு முணுத்தபடி ஜீப்பில் ஏறிக் கொண்டார்கள். மரத்தை வளைத்து நின்றவர்கள் புன்னகையுடன் கிளம்பினார்கள். வாகனங்கள் பெருமூச்சுடன் நகர ஆரம்பித்தன. பாபு சுய நினைவு வந்தவனாய் நடந்தான். பெரிய விபத்திலிருந்து மீண்டதைப்போல் இருந்தது.

அவன் பள்ளிக்குச் செல்லும் வழியில் அது இருந்தது. தார்ச் சாலையை ஒட்டியிருந்த நடை பாதையில் மற்ற மரங்களின் வரிசையில் ஒட்டாமல் சற்று முன்னால் சாலையில் வந்து நின்றது. பெரிய மரம், வானத்தைத் தொட்டபடி - ஆகாசத்தை அளப்பதைப்போல பசேலென்ற இலைகளுடன் கூடிய கிளைகளை விரித்தபடி. பாபுவுக்கு அந்த மரத்தைப் பார்க்கப் பிடிக்கும் என்பதைவிட அதைப் பார்க்காவிட்டால் அன்று எதிலும் மனசு இலயிப்பதில்லை என்றுதான் சொல்லவேண்டும். அவனது உணர்வுடன் அது ஒன்றிவிட்டதாகத் தோன்றுகிறது. அதை நெருங்கும்போது ஒரு பாதுகாப்பு உணர்வு ஏற்படுகிறது. மரத்தின் அருகில் வந்ததும் நடை நிதானப்படுகிறது. அதைப் பவ்யத்துடன் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளத் தோன்றுகிறது. அந்த மரத்துக்குத் தினமும் யாராவது மஞ்சள் குங்குமம் இட்டிருப்பார்கள்.

பெங்களூருக்கு வந்த புதிதில் அவனுக்குக் கன்னடம் வராது. அவனுடன் படித்த செங்கப்பா ஒரு நாள் அவனுடன் நடந்து வந்தான். மரத்தைக் கண்டதும் அதைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டான். செங்கப்பாவுக்கு அரைகுறையாகத் தெலுங்கு தெரியும். பாபு அவனை வேடிக்கை பார்ப்பதைக் கண்டு,

"நீயும் ஒத்திக்கோ. இது மர மாரி" என்றான்.

சிறப்புச் சிறுகதை

# மரமாரி



பாபு பயபக்தியுடன் ஒற்றிக் கொண்டான்.

"மாரின்னா?"

"இந்த மரத்தும் பேர் அது. கார்பரேஷன்காரன் இதை வெட்டமாட்டான். யாரும் இதை வெட்டவிட மாட்டாங்க."

"ஏன்?"

"மழை தேவுடு இது. வெட்டினா சபிச்சுடாதா? அப்புறம் எப்படி மழை பெய்யும்?"

பாபுவுக்கு உடம்பு சிலிர்த்தது. நாக்கைத் தொங்கவிட்டு நிற்கும் காளியின் சொரூபமாக மரம் காட்சி அளித்தது. அன்று வீடு திரும்பியதும் அம்மாவிடம் சொன்னான் "எனக்குத் தெரியும், நம்ம ஊரிலே ஏன் அவ்வளவு கஷ்டம்னு. மரமாரி சபிச்சிருக்கும்."

"எது?"

"மாரி! மழை சாமி, மரமா நிக்கும்! அதை நம்ம ஊர் சனங்க வெட்டியிருப்பாங்க. அதான் மழையே வரமாட்டேங்குது. ஊர்க்காரங்க மட்டும் வராதிருந்தால் அந்தக் கோட்டும் தொப்பியும் அணிந்த கார்ப்பரேஷன்காரர்கள் இதை வெட்டி வீழ்த்தியிருப்பார்கள். அவன் மரத்தைச் சுற்றித் தனது மெல்லிய கைகளைப் பரத்தினான். இது இருக்கும்வரை தனக்கும் அம்மாவுக்கும் அப்பாவுக்கும் எந்த ஆபத்தும் இல்லை என்று நினைத்துக் கொண்டான். தேவுடுதான் இது. இல்லாவிட்டால் அந்தப் பெரிய மனிதர்கள் அத்தனைக் கோபமாக வெட்டுவதைத் தடுப்பார்களா? இந்த ஊரில் கால் வைத்த தினத்திலிருந்து மாரிதான் பாபுவைக் காப்பாற்றுவதாக செங்கப்பா அடித்துச் சொன்னான். புதிதாக வந்த அவன் எப்படியோ பரீட்சையில் பாஸ் செய்வதற்கும் மாரிதான் காரணம் என்று சொன்னான். எங்கிருந்தோ வந்த காற்றில் மாரியின் கிளைகளும் இலைகளும் அசைந்தன. சில உலர்ந்த இலைகள் அவன்மேல் விழுந்தன. அவனுக்குச் சிரிப்பு வந்தது. மாரி எப்பவுமே அவன் அருகில் வந்தால் தனது சந்தோஷத்தை இப்படித்தான் வெளிப்படுத்தும்.

பெங்களூரில் பஸ் நின்றபோது இருட்டிவிட்டது. சிலு சிலுவென்று அடித்த குளிர்ந்த காற்றில் உடம்பு இலேசாக நடுங்கிற்று. அடிவயிற்றில் பீதி கப்பென்று பிடித்தது. அவர்களை அழைத்துப்போக கோபாலின் தங்கை லக்ஷ்மியின் புருஷன் ராஜு வந்திருந்தான். இரவு சாப்பிட்டுப் படுத்ததும் லக்ஷ்மி உறங்கிப் போனாள். புஜ்ஜி கண்கள் அகல, கூரையைப் பார்த்தபடி படுத்திருந்தாள். காலை, புஜ்ஜி அத்தை லக்ஷ்மியுடன் கிளம்பிப் போனாள். பாபு அத்தை கொடுத்த கேழ்வரகுக் கூழைச் சாப்பிட்டுவிட்டு வெளியில் வந்தபோது முதலில் கண்ணில் பட்டது-அந்த நெடிதுயர்ந்த மரங்கள். சாலையின் இருபுறங்களிலும் வானை நோக்கி நின்றன. தலை

வாஸந்தி

உச்சியில் கிரீடத்தைப் போல் ஆரஞ்சு நிறத்திலும் மஞ்சள் நிறத்திலும் பூக்கள் இலைகளை மறைத்தபடி அலங்கரித்தன. அவனுக்கு வியப்பிலும் சொல்லத் தெரியாத மகிழ்ச்சியிலும் மூச்சு முட்டிற்று. வேக வேகமாக சுவாசம் விட்டபடி அவன் தட்டாமாலை சுற்றினான். அவனுடன் மரங்களும் சுற்றின. ஆரஞ்சும் மஞ்சளும் கைகோத்துச் சிரித்தன. தப்பென்ற சின்ன சத்தத்துடன் ஓர் ஆரஞ்சுப் பூ அவன் பாதத்தில் விழுந்தது. அதை அவன் எடுத்து அதன் மிருதுவான இதழ்களைத் தொட்டான். அவனது கையளவுப் பூ.

புஜ்ஜி லக்ஷ்மியுடன் வீடு திரும்பிய போது, வீட்டு வாசலில் பத்து ஆரஞ்சுப் பூக்கள் கோலம் போல வட்டமாக வைக்கப்பட்டிருந்தன. புஜ்ஜியின் களைத்த முகத்தில் உற்சாகம் தெரிந்தது. பாபுவைக் கட்டிக் கொண்டு சிரித்தாள். "எனக்கு வேலை கிடைச்சுடுச்சு! வேலை கிடைச்சிடுச்சு!"

அவள் சிரிப்பதைக் கண்டு பாபுவும் சிரித்தான். சித்தூர் கலெக்டர் ஆபீசில் பெண்கள் அழகாகச் சேலை உடுத்தி மேஜைக்கு முன் நாற்காலியில் தோரணையுடன் அமர்ந்திருப்பதை அவன் ஒருமுறை அப்பாவுடன் அங்கு சென்றபோது பார்த்திருக்கிறான்.

''புலியை முறத்தால விரட்டின பெண்ணைத் தெரியுமா?''

''தெரியாது. முறைச்சே என்னை விரட்டற உன்னைத்தான் தெரியும்!''

— பம்மல் நாகராஜன்



"என்ன வேலை?"

"வீட்டு வேலை. பாத்திரம் தேச்சு வீடு பெருக்கித் துணி துவைச்சுக் காயப் போடணும். ரெண்டு வீடு. எவ்வளவு காசு தெரியுமா? ஆயிரம் ரூபாய் மாசத்துக்கு!"

வேண்டாம் ஊருக்குப் போயிறலாம் என்று சொல்ல வேண்டும்போல் இருந்தது அவனுக்கு.

"நயினா?" என்றான் தயக்கத்துடன்.

"அவருக்கும் வேலை கிடைச்சுடுச்சு. கட்டிட வேலை. தினக் கூலி."

தினக்கூலி என்றால் அவனுக்குத் தெரியும். ஆழ்கிணறு தோண்ட வருபவர்களுக்கு அப்பா கொடுப்பார். அவன் தலையைக் குனிந்து கொண்டான் குழப்பத்துடன்.

புஜ்ஜி அவனைத் தூக்கி உள்ளே அழைத்துக் கொண்டு போனாள். "கஷ்டப்படணும் பாபு!" என்று அவனது நெற்றியில் முத்தமிட்டாள். "அப்பதான் ஊர் கடனை அடைக்க முடியும். நாளைக்கே உன்னை ஸ்கூல்ல சேர்க்கப்போறேன். கன்னடம் படிக்கணும் நீ."

அவனுக்குத் தூக்கிவாரிப்போட்டது. "எனக்கும் கன்னடம் வராது!"

"கத்துக்கிடறது! என்ன பிரமாதம்! இந்த ஊர்தான் நமக்கு இனிமே. இந்த ஊர் பாஷையைக் கத்துக்கிடலேன்னா எப்படிப் பிழைக்கறது?"

புஜ்ஜியிடம் எல்லாவற்றுக்கும் காரணம் இருந்தது. பிழைக்கணும்; கடனை அடைக்கணும்.

மறுநாள் அவனுக்கு எண்ணெய் தடவி, தலை வாரி, துவைத்து மடித்த சட்டை டிராயரை அணிவித்து கவர்ன்மென்ட் பள்ளியில் கொண்டு சேர்த்த போது புஜ்ஜி கண்டிப்புடன் சொன்னாள்.

"கஷ்டப்பட்டுப் படிக்கணும், பாபு."

அந்தப் பெரிய கட்டடத்தைப் பார்த்துப் பயந்து போயிருந்தாலும் 'சரி' என்று அவன் மண்டையை ஆட்டினான். அவனைப் பள்ளியில் சேர்த்ததற்கும் ஊர்க் கடனை அடைப்பதற்கும் ஏதோ சம்பந்தம் இருந்ததைப்போல் இருந்தது.

பெங்களூர் வந்து ஒரு வகுப்பு முடிந்து அடுத்த வகுப்புக்குப் புரமோஷன் ஆகிவிட்டது. கன்னட வகுப்பில் அவனுக்குத்தான் முதல் மார்க். 'கஷ்டப்படணும்' என்ற வார்த்தை மந்திரம்போல் உள்ளே ரீங்காரித்தது. புஜ்ஜி இப்போது நான்காயிரம் சம்

பாதிக்கிறாள். கோபால் மாதம் இரண்டாயிரம் ரூபாய் சீட்டு கட்டிப் பணம் சேமிக்கிறான். இன்னும் பாதிக் கடன் இருக்கிறது- அடைக்க. தனி வீட்டில் இருக்கிறார்கள். ஒற்றை அறையாக இருந்தாலும் நிம்மதியாக இருக்கிறது. சித்தூரில் கிடைக்காத நிம்மதி.

இதெல்லாம் அந்த மர மாரிக்குத் தெரியும். தினமும் அவன் பள்ளிக்குச் செல்லும்போது வீட்டுச் செய்தி எல்லாம் அதனிடம் சொல்லும் பழக்கம் ஏற்பட்டிருந்தது. அவனுக்கு என்னவோ அது தேவுடு என்பதைக் காட்டிலும் உற்ற நண்பனாகத் தோன்றிற்று. அதை ஒருமுறை ஆரத்தழுவி விட்டுச் சென்றால் அன்று முழுவதும் அது கூடவே துணை இருப்பதுபோன்ற உணர்வு ஏற்பட்டது.

அன்று பள்ளிக்குக் கிளம்பியபோது "நானும் வரேன் உன்னோடு" என்றாள் புஜ்ஜி. "எனக்குப் பஸ்ஸைப் பிடிச்சு மடிவாலா சந்தைக்குப் போகணும். கோங்குரா கீரை அங்க நல்லதா கிடைக்குதாம்."

கீரை வாங்க டிக்கெட் கொடுத்து பஸ்ஸில் அம்மா செல்வது வியப்பாக இருந்தது.

"வேலைக்குப் போக வேணாம்?"

"இன்னிக்கு இல்லே. எல்லார் வீட்டிலேயும் ஊருக்குப் போயிருக்காங்க. 9.30 மணிக்கு ஒரு பஸ் வருது. 104. அதிலே ஏறிப் போவேன்."

"மர மாரி பஸ் ஸ்டாண்டுக்கு வருதே அதுவா?"

"அதிலெதான் பாபு போறேன்."

புஜ்ஜி இன்று நல்ல புடைவையும் ரவிக்கையும் அணிந்திருந்தாள். அகன்ற கண்கள் இன்று அமைதியாக இருந்தன. அடர்த்தியான சுருண்ட முடியைப் படிய வாரி பின்னியிருந்தாள். அவன் மெல்ல அவளைத் தொட்டான். அவள் என்ன என்பதைப்போல் அவனைப் பார்த்தாள்.

"நா படிச்சு பெரிய வேலை பாப்பேன் பாரு. அப்ப உன்னை வீட்டு வேலை செய்ய விடமாட்டேன்!"

அவள் சரேலென்று நின்று அவனைப் பார்த்தாள். மெலிதாகப் புன்னகை செய்தாள்.

ஏதும் பேசாமல் அவனை அணைத்துக் கொண்டாள். மர மாரியின் நினைவு அவனுக்கு வந்தது. இனம்புரியாத நெகிழ்வு ஏற்பட்டது. அதைப்போல வானுயர கிளை பரப்பி தான் அம்மாவை ரட்சிக்க வேண்டும் போல இருந்தது. அம்மா அவனது வார்த்தைகளை நம்பினாளா என்று தெரியவில்லை. மரமாரி மரத்துக்கு அருகில் வந்ததும் அவன் வழக்கம்போல் அதைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டான். அம்மாவும் சிரித்தபடி ஒற்றிக்கொண்டாள். அவள் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டதும் அவன் டாட்டா சொல்லிவிட்டு, பள்ளிக்கு விரைந்தான்.

சாப்பாட்டு இடைவேளையின்போது அவனைத் தேடிக்கொண்டு செங்கப்பா வந்தான்.

"உங்களைப் பார்க்கறவங்க பொய் பேசாம இருக்கவே முடியாது..."
"எப்படிச் சொல்றீங்க?..."
"பின்னே... 'அழகு'ங்கற உங்க பேரைச் சொல்லிக் கூப்பிட்டுத்தானே ஆகணும்!"
- கே. ஆனந்தன்



"உனக்குத் தெரியுமா, மர மாரி விழுந்துடுச்சு!"

"விழுந்துடுச்சா?" என்றான் பாபு அதிர்ந்து. "காலைலே பார்த்தேனே? கார்ப்பொரேஷன்காரங்க வெட்டிட்டாங்களா?" கேள்வியை முடிக்க முடியாமல் அவன் கண்களில் நீர் நிறைந்து தொண்டையில் வார்த்தை சிக்கிக் கொண்டது.

"இல்லேல்லே! ஒரு ஆக்ஸிடென்ட்டாயிடுச்சு. ஒரு புது பஸ் டிரைவர் ஓட்டத் தெரியாமெ ஓட்டி மர மாரி மேல இடிச்சு மரம் விழுந்துடுச்சு."

நேரில் கண்டவனைப் போல் செங்கப்பா கண்களை அகல விரித்து, கைகளை ஆட்டிச் சொன்னான்.

"அப்புறம்?"
"என்ன பண்றது... எல்லாம் அதோட சாபம்!"

புஜ்ஜி அவனைக் கண்கள் அகலப் பார்த்தாள். அவளது உடல் மெலிய ஆரம்பித்ததிலிருந்து புஜ்ஜியின் கண்களின் அகலம் அதிகரித்திருந்தது. முகத்தை ஆக்கிரமித்தது.
"சாபந்தான், வேறென்ன?" என்றாள் அலுப்புடன்.
"நம்ம ஊரில மாரி இருந்ததாமா?"
"மாரியுமில்லே, ஏரியுமில்லே. ஊர் மொத்தமா பாவம் செஞ்சிருக்கணும். அதான் பூமி காஞ்சு போச்சு."
அவன் வியப்புடன் அம்மாவைப் பார்த்தான். சளைக்காமல் ஒவ்வோர் இடமாக ஆழ்கிணறு தோண்டித்தோண்டி நீர் காணாமல் நிராசையுடன் நின்ற அப்பாவின், சித்தப்பாவின் முகங்கள் அவனுக்கு நினைவுக்கு வந்தன. ஆழ்கிணறுக்காக அப்பா ஆழம் தெரியாமல் கால் வைத்து விட்டதாக அம்மா அன்று ஊரை விட்டுக் கிளம்புவதற்கு முன் அழுதாள். இரண்டு லட்சம் ரூபாய் கடன் கழுத்தை நெறுக்கி விடும் என்று அம்மா பயந்ததற்குக் காரணம் இருந்தது. கோடி வீட்டு பெத்தப்பா ஒரு நாள் தூக்கில் தொங்கினார். சாவு வீட்டுக்குப் போய்வந்த கையுடன் அம்மா மூட்டைக் கட்ட ஆரம்பித்தாள். "இனிமே இந்த ஊரிலே ஒரு நிமிஷம் கூட இருக்கக் கூடாது. கிளம்பிடுவோம்" என்றாள் அப்பாவிடம்.
"நம்ம மண்ணைவிட்டுப் போகணும்ங் கிறியா புஜ்ஜி?" என்று கோபால் முணுமுணுத்தான்.
"வருஷக்கணக்கா வானம் திறக்கல்லே. பூமி வறண்டு போச்சு. அதுங்கிட்ட நமக்குக் கொடுக்க எதுவுமில்லே. அதைத் தோண்டித் தோண்டி காயப்படுத்தினது போதும். எங்க நமக்குச் சோறு கிடைக்குதோ அதுதான் நம்ம மண்ணு: கிளம்பு. வாங்கின கடனைத் திருப்பணுமா வேண்டாமா? இல்லே, நீயும் பெத்தப்பா மாதிரி கயித்தைத் தேடப் போறியா?"
அதற்குப் பிறகு கோபால் வாயைத் திறக்கவில்லை.
கிளம்பி எங்கு செல்வது என்ற குழப்பம் இருக்கவில்லை. ஏற்கெனவே பல குடும்பங்கள் பெங்களூருக்குச் சென்றிருந்தன. அங்கு யார் சென்றாலும் வேலை கிடைப்பதாகவும் சௌகர்யமாக வாழ்வதாகவும் சொன்னார்கள். மூட்டை முடிச்சுடன் பெங்களூருக்கு பஸ் ஏறி அமர்ந்ததும் கோபால் முகத்தை மூடிக் கொண்டு அழுதான். பாபுவுக்கும் அழுகை வந்தது.

"வெள்ளிக்கிழமை, முழுக்கவும் அவரு 'மௌன விரதம்' இருப்பாரு!"
"அப்படியா?"
"ஆமாம்; அன்னிக்கு தன்னோட மொபைலைக்கூட 'சைலண்ட்' மோடுலதான் வெச்சிருப்பார்னா பாரேன்!"
- அனன்யா



கூட்டம் விலகிச் சென்றதும் பாபு மெள்ள மர மாரியின் அருகில் சென்றான். "மோதின வேகத்திலே அங்க நின்றிருந்த ஒரு ஆள் க்ளோஸ்! ரெண்டு மூணு பேர் ஆஸ்பத்திரியிலே அடிபட்டு இருக்காங்க. பிழைப்பாங்களான்னு தெரியாது!"
"ஐயோ! எந்த பஸ்?"
"நம்பர் 104!"
"அய்யய்யோ!" பீதியில் பாபு ஒரு விநாடி உறைந்தான். அடுத்த கணம் கையில் இருந்த சாப்பாட்டுத் தட்டைக் கீழே வைத்து

விட்டுத் தலை தெறிக்க ஓட ஆரம்பித்தான். செங்கப்பா ஏதோ சொன்னது காதில் விழ வில்லை. 'தேவுடா தேவுடா' என்று மனசு தேம்பிற்று. மூளை அசைவற்று ஜடமாகிப் போன நிலையில் அவன் அம்பு பாய்ந்ததைப் போல மர மாரி பஸ் ஸ்டாண்டுக்குச் சென்றான்.

மரம் இன்னும் சாலை முழுவதும் தன் கிளைகளைப் பரப்பி மல்லாந்து இருந்தது - நாக்கைத் தொங்க விட்டு நிற்கும் காளியாக. பஸ் நிலையத்தின் கூரை மீது ஒரு ராக்ஷஸ கிளை விழுந்து இரண்டாகப் பிளந்து கூரை சரிந்திருந்தது.

அவன் உதடு துடிக்க அதைப் பார்த்தான். அம்மா அதன் கீழ் தான் நின்றிருந்தாள்.

ஒரு சின்ன கூட்டம் மரத்தை அனுதாபத்துடன் பார்த்தபடி நின்றிருந்தது: அதை வெட்டி விடக் கூடாது என்று தடுத்த கூட்டம்!

பெத்தப்பா தூக்குப் போட்டுக் கொண்டபோது ஊரில் இப்படித்தான் நின்றிருந்தார்கள். அம்மா ஒருத்திதான் சொன்னாள் 'அவர் செஞ்சது துரோகம்!'

சட்டென்று மிதமிஞ்சிய வெறுப்பு அவனை ஆட்கொண்டது. கொலையுண்ட காளியைப் போல காட்சி அளித்த மர மாரியை ஒரு வெற்றுப் பார்வை பார்த்துவிட்டு அவன் தலை தெறிக்க வீட்டை நோக்கி ஓடினான்.

வீடு பூட்டி இருந்தது. அத்தை வீடும் அருகில் இல்லை. அம்மா எந்த ஆஸ்பத்திரியில் இருக்கிறாளோ. செத்துப் போனது அவளாக இருக்கலாம். அடிபட்டு இருந்தாலும் பிழைப்பாள் என்று என்ன நிச்சயம்?

மிக மோசமாக, தான் ஏமாற்றப்பட்டதாக அவனுக்குக் கோபமும் துக்கமும் வந்தன. அப்பா வரும் வரை தான் ஏதும் செய்வதற்கில்லை என்பது அதிக சோர்வைத் தந்தது.

அவன் அழுது அழுது களைப்பில் தூங்கிப் போனான்.

யாரோ தோளை உலுக்கினார்கள். அவன் கண்ணைத் திறந்து குழப்பத்துடன் நிமிர்ந்தான். புஜ்ஜி நின்றிருந்தாள். காலையில் கட்டியிருந்த சேலையில், கையில் கோங்கூரா கீரையுடன்.

"என்ன பாபு, ஸ்கூல்லேந்து ஏன் வந்தே, உடம்பு சரியில்லையா என்ன?" என்றாள்.

அவன் சந்தேகத்துடன் அவள் சேலையைத் தொட்டான். "நீ செத்துப்போயிட்டேன்னு நினைச்சேன்! மர மாரி விழுந்தபோது நீ அங்க இல்லே?"

அவள் கீரையை கீழே வைத்துவிட்டு அவன் தலையை வருடினாள். "இருந்தேன். அதனாலெதான் நா பிழைச்சேன். அது மட்டும் இல்லேன்னா பஸ் ஸ்டாப்புலே இருந்த ஜனங்கமேல மோதி அந்தப் பாழாய்ப்போன டிரைவர் எல்லாரையும் சாகடிச்சிருப்பான்."

"யாரோ செத்துட்டதா செங்கப்பா சொன்னான்."

"யாரும் சாகல்லே. மரத்துக்குதான் அடி. ஜனங்க தப்பிச்சாங்க."

அவன் சரேலென்று அவளை அணைத்துக் கொண்டு விசித்து விசித்து அழுதான்.

"எனக்கு ஒண்ணும் ஆகல்லே, ஏன் அழறே?" என்றாள் புஜ்ஜி.

அவனுக்குச் சொல்லத் தெரியவில்லை. காரணம் புரியாத நிம்மதி மனத்தில் படர்வதற்கு அம்மா உயிருடன் இருப்பது மட்டும் காரணமில்லை என்பதை எப்படி விளக்குவது என்று புரியவில்லை. ●

"தீபாவளிக்குப் பின்னாலே தானே பொங்கல் வரும்?"

"திரும்பிப் பார் உனக்குப் பின்னாலேயும் பொங்கல் வருது."

- ஆர்.நரசிம்மன்







# ஏவி.எம்.சரவணன்



"ஆண்டவன் கொடுத்த உடம்பை நல்ல முறையில் காப்பாற்ற வேண்டியது நம் கடமை. ஆனால் யார் இதை நினைக்கிறார்கள். மனிதன் உடல்சார்ந்த பிரச்னைகளைப் பெரும்பாலும் தானே வருவித்துக் கொள்கிறான். மோசமான உணவுப் பழக்கம், மோசமான வாழ்க்கை முறையால் உடலுக்குத் தாவுகின்றன நோய்கள்...

எதைச் சாப்பிட்டாலும் வயிறு, வயது இரண்டையும் பார்க்க வேண்டும். இது நம் வயிறு ஏற்கக்கூடியதா, இந்த வயதுக்கு இதைச் சாப்பிடலாமா... என்று யோசிக்க வேண்டும்.

உணவுக் கட்டுப்பாடு மனிதனுக்கு முக்கியம். பசிக்கு மட்டுமே சாப்பிட வேண்டும். ருசிக்காகச் சாப்பிடக் கூடாது. இந்த 67 வயதிலும் நான் நலமோடு இருப்பதற்கு இவையெல்லாம்தான் காரணம். தேவையானதை மட்டும், அளவாகச் சாப்பிடும் விழிப்புணர்ச்சி எனக்குச் சின்ன வயதிலேயே ஏற்பட்டு விட்டது.

# தியாகம் செய்யத்

டாக்டர் ரங்கபாஷ்யம் 1971லேயே என்னிடம் கூறினார்... 'உங்க அப்பாவுக்கு நாற்பது வயதிலேயே சர்க்கரை இருந்தது' என்று. ஷுகர் பரம்பரைக் குணம் கொண்ட நோய் என்பதால் அப்போதே எச்சரிக்கை அடைந்து விட்டேன். இனிப்பைக் குறைத்து அரிசி உணவு வகைகளை முடிந்தவரை தவிர்க்கிறேன்.

எங்கள் உறவினர் கண்ணதாசன் மகள் ரேவதி சண்முகம், கறிவேப்பிலைச் சாதம் செய்து தருவார். அதை மட்டும் விரும்பிச் சாப்பிடுவதுண்டு. அதுவும் ஞாயிற்றுக் கிழமைகளில் மட்டும். மற்றபடி சாதம் என்பதே எனக்கு அபூர்வமாகி விட்டது.

எதையும் குறிப்பிட்ட நேரத்தில் செய்ய வேண்டும் என்பது என் தந்தையார் கொள்கை. சாப்பாட்டு விஷயத்திலும் குறிப்பிட்ட நேரத்தில் சாப்பிட்டு விட வேண்டும். இன்றளவும் அதை நான் கடைப்பிடித்து வருகிறேன். விழாக்களுக்குப் போனால்கூட இனிப்பு



• வாக்கிங் வேளை • கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி மற்றும் ரகுநாத்துடன் ஏவி.எம்.சரவணன்...

எண்ணெய்ப் பதார்த்தங்களைத் தவிர்த்து விடுவேன்.

காலை 5.30க்கு எழுந்து, 5.30-6க்குள் வாக்கிங் புறப்பட்டு விடுவேன். புறப்படும் முன் கொஞ்சம் காப்பி - சர்க்கரை, பால் இல்லாமல்.

வாக்கிங்... பீச்சில். நண்பர்கள் கிருஷ்ணா ஸ்வீட்ஸ் முரளி, ரகுநாத் உடன்.

முன்பு பல ஆண்டுகள் யோகாசனம் செய்து வந்தேன். இப்போது செய்வதில்லை. உணவைப் போல உடற் பயிற்சியும் உடலுக்கு இதமாக இருக்க வேண்டும். நடைக்கு என்றும் தடையில்லை. நடந்துகொண்டே இருக்கலாம்.

உடல்நலத்துக்கு ஆகாது என்றால், நாவுக்குப் பிடிக்கும் எதையும் தயங்காமல் தியாகம் செய்துவிட வேண்டும்.

நான் ஒரு காலத்தில் நிறைய காப்பி குடித்தேன். ஒரு நாள் கணக்குப் போட்டால், பதினேழில் நின்றது! மறு நாளே முடிவு செய்தேன். அடுத்த எட்டு மாதங்கள் வரை காப்பியே சாப்பிடவில்லை.

எப்போதும் உற்சாகமாக இருப்பது என் குணம். யாராவது நலம் விசாரிக்கும் போது 'ஏதோ இருக்கேன்'னு சொல்லப் பிடிக்காது. நண்பர்களே சொல்வர்... 'நீங்கள் சொல்வதில் எங்களுக்கே உற்சாகம் பிறக்கிறது' என்று.

புகை, மது, மோசமான பழக்கம். நாங்கள் தயாரிக்கும் டீ.வி. சீரியல்களில் கூட புகை பிடிக்கும் காட்சிகளை முடிந்தவரை தவிர்ப்பேன். சினிமாவிலும் தவிர்க்கிறோம். புகையிலை சம்பந்தப்பட்ட ஆபத்தை கேன்சர் இன்ஸ்டிடியூட் போன போது நேரில் கண்டு அதிர்ச்சி அடைந்தேன். அதனால்தான் புகையிலை விஷயத்தில் அவ்வளவு கடுமையாக இருக்கிறோம்.

**- அருள் செல்வன்**

படம் : **யோகா**

# தயங்காதீர்கள்!



# இது புதிய முதல்வன்!

சின்னக் குழந்தைகளைப் புதிதாகச் சந்திக்கும் பெரியவர்கள், அவர்களுடைய பெயரை விசாரித்துச் செல்லம் கொஞ்சியதும், தவறாமல் கேட்கிற அடுத்த கேள்வி, 'நீ பெரியவனானதும் என்னவா வரப்போறே?'

இந்தக் கேள்விக்குப் பெரும்பாலான குழந்தைகள் அழகாகச் சிரித்தபடி, 'டாக்டர்' என்றுதான் பதில் சொல்லும். டீச்சர், வக்கீல், போலீஸ், பைலட், 'மிஸ் இண்டியா' என்று இன்று சற்றே மாறுபட்ட அவர்களின் பட்டியலில், கடந்த பத்தாண்டுகளாக ஒரு தனி நபரின் பெயர் சேர்ந்துகொண்டிருக்கிறது. 'நான் பில் கேட்ஸாகப் போறேன்' என்கிறார்கள் இன்றைய குழந்தைகள் பெருமிதமாக.

கவனியுங்கள். 'கம்ப்யூட்டர் விஞ்ஞானியாகப் போகிறேன்' என்று யாரும் பொதுப்படையாகச் சொல்வதில்லை. அதைக் காட்டிலும், பில் கேட்ஸாவதில்தான் அதிக விசேஷம்!



என்.சொக்கன்

குழந்தைகள், மாணவப் பருவத்தில் இருக்கிறவர்களின் பார்வையில் பில் கேட்ஸ் ஒரு மகா அறிவாளி. எதையும் விநாடி நேரத்துக்குள் புரிந்துகொண்டு எல்லாவற்றையும் அதிவேகத்தில் கணக்கிட்டுவிடக்கூடிய அசாத்திய சூரர். பின்பற்றுவதற்கேற்ற பெரிய புத்திசாலி.

அதே சமயம், தொழில்துறையில் இருக்கிறவர்கள் பில் கேட்ஸை ஒரு பிரமாதமான பிஸினஸ் புள்ளியாகப் பார்க்கிறார்கள். அவரைப் போலத் தாம் எடுத்துக்கொண்ட துறையில் அழுத்தமான ஆதிக்கம் செலுத்தி, மிகப்பெரிய வெற்றியும் அடைந்த தலைவர்கள் மிகக் குறைவு. கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டுகளாக யாராலும் அசைக்க முடியாத, உலகின் 'நம்பர் 1' பணக்காரராக இருக்கிறார் என்றால் சும்மாவா?

இதனால்தான் அரை டிராயர் பொடியன்களில் தொடங்கி, கோட் சூட் கனவான்கள்வரை எல்லோராலும் பில் கேட்ஸ் ஓர் உதாரண புருஷராகக் கருதப்படுகிறார். கடந்த இரு தலைமுறைகளாக அவரளவுக்கு உலக மக்களிடையே தாக்கம் உருவாக்கிய இன்னொரு பிரபலத்தைக் குறிப்பிடுவது சிரமம்.

மாணவர்களுக்குத் தொழில் துறை நுணுக்கங்கள், மேலாண்மைப் பண்புகள், தலைமைக் குணங்களைச் சொல்லித் தருகிற எந்தக் கல்லூரியை எடுத்துக் கொண்டாலும், பில் கேட்ஸின் உதாரணத்திலிருந்துதான் பேச்சை ஆரம்பிக்கிறார்கள். வெற்றியடைந்த புதுத் தொழிலதிபர்களுடைய பேட்டிகளைப் படித்தால், பில் கேட்ஸிடமிருந்து தாங்கள் ஏதேனும் ஒரு பாடம் கற்றுக் கொண்டதாகத் தவறாமல் குறிப்பிடுகிறார்கள்.

இணையத்தில் நுழைந்து, 'பில் கேட்ஸ்' என்று தட்டித் தேடினால், கோடிக் கணக்கான ஆவணங்கள் கொட்டிக் கிடக்கின்றன. அதிக எண்ணிக்கையிலான வலைப் பக்கங்களைக் கொண்ட

உலகப் பிரபலங்களில் பில் கேட்ஸ் முக்கியமானவர்.

## இந்த ஆள் ஹீரோவா அல்லது வில்லனா... இவரை நம்பலாமா...?

ஆனால், இந்த 'மரியாதை'க்கு நேரெதிராக, கேட்ஸ் மீது கோபம் / வெறுப்பு கொண்டு, அவரை அவமானப் படுத்துவதற்கென்றே உருவாக்கப்பட்ட இணைய தளங்களும் தாராளமாகத் தென்படுகின்றன.

உதாரணமாக ஓர் இணையப் பக்கத்தில், நீங்கள் பில்கேட்ஸ் முகத்தின் மீது அழுகிய முட்டை அல்லது தக்காளியை வீசி எறிந்து விளையாடலாம். இன்னொரு தளத்தில், பில்கேட்ஸ் உங்களோடு ஏதோ பேச முயல்வார். நீங்கள் அதை மதிக்காமல், அவர் முகத்தைப் பீரங்கியால் சுட்டுச் சிதைக்கலாம். இன்னும் கேட்ஸ் கண்களில் அம்பு விடுகிற, அவருடைய முகத்தைச் சாக்கடையில் போட்டு அமுக்குகிற விளையாட்டுகளெல்லாம்கூட இருக்கின்றன.

இந்த எதிர்மறை விளையாட்டுகளுக்கெல்லாம் உச்சமாக, 'பில் கேட்ஸ் இறந்துவிட்டார்' என்கிற (பொய்த்) தலைப்பிலேயே ஒரு விசேஷ இணைய தளத்தைத் தொடங்கி நடத்தி வருகிறார்கள் சிலர். இதென்ன அதிசயம்? இது எப்படிச் சாத்தியம்?

அநேகமாக உலகப் பிரபலங்கள் எல்லோரும் சந்தித்த பிரச்னைதான் இது என்றாலும் ஒரே சமயத்தில் பலரால் விரும்பப்படுகிற நபராகவும், பலரால் வெறுக்கப்படுகிற ஒருவராகவும் இருக்கிறார் பில்கேட்ஸ்.

சமீபத்தில், தன்னுடைய மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தின் முக்கிய பொறுப்புகளிலிருந்து விலக விருப்பதாக பில்கேட்ஸ் அறிவித்தார். அப்போது உலகமெங்கும், 'அச்சச்சோ' என்கிற அதிர்ச்சிக் குரலும், 'அப்பாடா' எனும் நிம்மதிக் குரலும் கலந்துதான் கேட்டன.

ஏன் இந்த முரண்பாடு? உண்மையிலேயே பில்கேட்ஸ் அசாத்தியத் திறமைசாலியாக இருந்தால், அவருக்கு ஏன் இத்தனை எதிரிகள்? ஒருவேளை அவர் இத்தனை வெறுப்புக்கும் தகுதியுள்ளவராக இருந்தால், இந்த உலகத்தில் பாதிப் பேர் அவரைப் பின்பற்றத் துடிக்கிறார்களே, அது எப்படி?

இந்த பில்கேட்ஸை நம்பிப் பின்பற்றலாமா அல்லது பேசாமல் ஒதுங்கிப் போய்விடலாமா? இந்த ஆள் ஹீரோவா, அல்லது வில்லனா?

(தொடரும்)





# இரண்டில் ஒன்று!

மெலட்டூர் இரா.நடராஜன்

ஆஸ்பிடலின் தூக்கலான டெட்டால் வாசனை ராகவனைச் சங்கடப்படுத்தியது. வலக் கையைப் பார்க்க முடிந்ததே தவிர, அதை அசைக்க முடியவில்லை. கொஞ்சம் இடுப்புப் பகுதியை அசைக்கலாம் என்று முயற்சி செய்ததில் 'சுரீர்' என்று மின்னல் மாதிரி ஒரு வலி தண்டுவட நுனியில் புறப்பட்டு, கழுத்து வரை வந்தது.

"உங்களை யார் உள்ளே விட்டார்கள்? இங்கு யாருக்கும் அனுமதியில்லை."

"சிறப்பு அனுமதி உண்டு."

"சரி, அப்படித்தான் உள் மனம் சொல்கிறது. எதற்கு வந்திருக்கிறீர்கள், நீங்கள் இருவரும்?"

"இருவரும்...." ஒருவரையொருவர் பார்த்துச் சிரித்துக்கொண்டார்கள். "நாங்கள் ஒருவர்" என்றார்கள் கோரஸாக. அது ராகவனுக்கு எரிச்சலைத் தந்தது. கோபமாக வெற்றுப் பார்வை பார்த்தான்.

"சரி, சரி. நாங்கள் இருவர். அப்படியே வைத்துக் கொள்வோம். ஒரு பேச்சுக்கு!" என்று சொல்லிவிட்டு மறுபடியும் சிரித்தார்கள்.

"என்ன சிரிக்கிறீர்கள்... இன்னொரு முறை சிரித்தீர்களானால் சத்தம் போட்டு உங்களை வெளியேற்றி விடுவேன்."

சிரிப்பது நின்று, "ஒரே மூச்சில் இரணடு கேள்விகள் கேட்டாலும் பதில் ஒன்றுதான். இருப்பதும் பார்ப்பதும் வெவ் வேறு நிலைகள்."

"சபாஷ். நீங்கள் இருவரும் ஒருவரா? நான் நம்ப வேண்டும். அப்படியானால் நான் இருவரா?"

"ஆமாம். உடல் தெரிகிறது. உயிர் உன்னிலும் உன்னைச் சுற்றியும் இருக்கிறது. அது தெரியவில்லை. ஆனால் இரண்டும் ஒன்றே."

ராகவனுக்குத் தலை சுற்றியது. "இல்லை. நாத்திகனான நான் உங்கள் ஆத்திகக் கருத்துகளை ஏற்க மாட்டேன்."

"அதில் தவறில்லை. இரண்டும் ஒன்றே."

"இதென்ன புதுக்குழப்பம்?"

"ஆமாம். ஒன்று இருப்பதாக நம்புபவர்கள் ஆத்திகர்கள்; அதைப் பூஜ்ஜியம் என்று சொல்பவர்கள் நாத்திகர்கள்."

"நீங்கள் சொல்வது லாஜிக்கலாக இருந்தாலும் என் புத்தி ஏற்க மறுக்கிறது."

"அது உன் இஷ்டம். உன் கண்களுக்குப் புலப்படவில்லை என்பதற்காக ஓர் உண்மையை இல்லை என்று சொல்வது முட்டாள்தனம். இரண்டு உயிரணுக்கள் ஒன்று சேர்ந்து ஓர் உயிரை உண்டாக்குகின்றன. இல்லையென்பது உருவாகும்; உருவானது இல்லையென்பது ஆகும். ஆக இரண்டும் ஒன்று."

அப்போதுதான் ராகவன் கவனித்தான். அவர்கள் இருக்கிறார்கள் என்பது புத்திக்கு எட்டியதே தவிர, அவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை உணர முடியவில்லை. அவர்கள் இருவருமே ஒரே மாதிரி இருந்தார்கள். முகம் வட்டமாக இருந்தது. மனதுக்குப் பிடித்த பிரகாசமான ஜோதி ரூபமாகத் தெரிந்தார்கள். அவர்களை உருவத்தில் சேர்ப்பதா இல்லை, அருவத்தில் சேர்ப்பதா என்ற குழப்பம் இருந்தது.

"எனக்குக் கொஞ்சம் பயமாக இருக்கிறது. நீங்கள் பேய்களா? அல்லது நான் செத்துப் போன பின் என்னை அழைத்துப்போக வந்திருக்கும் எம கிங்கிரர்களா?" என்றுதானே கேள்விப்பட்டிருக்கிறேன்! நீங்கள் அப்படி இல்லையே?

"மரண பயத்தின் கற்பனை வெளிப்பாடுதான் பேய்களும் எம கிங்கிரர்களும்.

பிறப்பு எப்படி ஒரு நிகழ்வோ அப்படித்தான் மரணமும்.''

''அப்படியானால் எனக்கு மரணமா? என் வாழ்க்கை முடியப் போகிறதா? இதோ நான் கத்தப் போகிறேன். நீங்கள் யார்? சொல்லுங்கள். என் மன பிரமைதானே?''

''கொஞ்சம் நெருங்கி வந்திருக்கிறாய்.''

''யார் நீங்கள்? எனக்குப் பொறுமை இல்லை. சொல்லுங்கள்.''

''சரி, சொல்லும்வேளை வந்துவிட்டது என்றே நினைக்கிறோம். நாங்கள் யாரா? ஒன்று இல்லை. மற்றொன்று இருக்கிறது. ஆக இரண்டுமாக ஒன்று. அதாவது நீதான் நாங்கள்.''

''மை காட் நானா? என்ன விளையாடுகிறீர்களா?''

''இதோ உன் இந்த விளையாட்டு முடிந்துகொண்டிருக்கிறது. ரிலே ரேஸ் மாதிரி அடுத்த ஓட்டத்துக்கான குச்சி உன்னிடமிருந்து எங்களிடம் வந்து கொண்டிருக்கிறது. நீ நினைப்பது போல் இது முடிவல்ல. சுழற்சியின் ஓர் அங்கம். இப்போதுவரை நீ ஒன்று. இனிமேல் நீயான நாங்கள் இரண்டானோம். பிறகு மீண்டும் ஒன்றாவோம். இது தொடர்ந்துகொண்டே இருக்கும். வருகிறோம்.''

ராகவனுக்குத் திடீரென மூச்சுத் திணறல் ஏற்பட்டது. அடுத்த இரண்டாவது நொடியில் செத்துப் போனான்.

மறுநாள் ராகவனுக்குப் புஷ்பாஞ்சலி நடந்தது. ''ஒரு சகாப்தம் நிறைவு பெற்றது'' என்றார் ஒருவர். ''ராகவனின் உடல் மறைந்தாலும் அவர் அவரது நினைவுகளால் நம்மோடு வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்'' என்றார் இன்னொருவர். இரண்டும் ஒன்று. ○









**பா**ரம்பர்யத் தன்மையாலும், சத்துக் குறைவுகளாலும் நம்மை விட்டு சீக்கிரமே அகன்று விடும் சமாச்சாரம் நம் தலை முடிதான்.

# சினிமாவுக்கு உதவும் சிலிக்கான்!





"இனி, இந்தப் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைத்துவிடலாம் என்கிறார் சென்னை அடையாறிலிருக்கும் ஃபேர் அண்ட் கேர் மருத்துவர் கோவிந்தராஜன்.

"1996-ல் துவங்கப்பட்ட எங்களது ஃபேர் அண்ட் கேர் நிறுவனம், இந்தப் பத்தாண்டுகளில் ஏராளமானவர்களின் இளமையை, பொலிவை மீட்டுத் தந்துள்ளது.

எங்களது ஹேர் பாண்டிங், ஹேர் வீவிங் முறையில் எண்ணற்ற நபர்களுக்கு அறுவை சிகிச்சை இன்றி, மருந்துகள் இன்றி மாற்று சிகிச்சை மூலம் முடி நெசவு செய்துள்ளோம்" என்ற டாக்டர், "ஏற்கெனவே கொட்டியது போக மீதமுள்ள முடியின் நிறம், தன்மைக்கேற்ற முடிகளைத் தேர்வு செய்து நெய்து விடும் முறையை வீவிங் என்கிறோம்.

ஏற்கெனவே உள்ள முடியுடன் செயற்கை முடியைக் கிளிப் செய்வதற்குப் பெயர் பாண்டிங். வீவிங்கை விட பாண்டிங் எளிதான விஷயம். பாண்டிங்கில் முடியைக் கழற்றலாம். வீவிங்கில் அப்படி முடியாது" என்கிறார்.

"இப்படிப் பொருத்திய அல்லது நெய்த முடியை, இயற்கை முடியைப் போல ஷாம்பு போட்டுச் சுத்தம் செய்யலாம்; தலை துவட்டலாம். எந்தப் பிரச்னையும் இல்லை. சிலிக்கான் என்றொரு முறை உண்டு. இதற்கெனத் தேர்ந்தெடுக்கப்படும் முடியானது இயற்கை முடியினைவிட அழகாக இருக்கும். திரைத் துறைப் பிரபலங்கள் இதன் மூலம் பெரும் பயனடைந்து வருகிறார்கள்" என்கிறார் டாக்டர் கோவிந்தராஜ்.

- சிபிமனு





# “ஜெயலலிதாவை மன்னித்து விட்டேன்!”

## — விறுவிறு விஜயகாந்த்

தேர்தல் இருந்தாலும் பரபரப்பு; இல்லாவிட்டாலும் அப்படியே இருக்கிறார் விஜயகாந்த். ஈஞ்சம்பாக்கத்தில் சபரியின் இறுதிக்கட்டப் படப்பிடிப்பு. ஈழத்தமிழர்கள் தொடர்பான காட்சி ஒன்று. அனலுக்கும் அதிரடிக்கும் கேட்க வேண்டுமா? அப்படியே ஆவி பறக்க வந்து உட்கார்ந்து பேசினார்.

**நிறைய பேர் புதிதாக உங்கள் கட்சியில் சேர்கிறார்கள். எந்த எதிர்பார்ப்பில் வருகிறார்கள்? பதவி கிடைக்கும் என்ற நம்பிக்கையிலா?**

"'உங்களோட கொள்கை பிடிச்சிருக்கு. நீங்க எடுக்கற திடகாத்திரமான முடிவு பிடிச்சிருக்கு. அதனாலதான் வந்தோம்'னுதான் சொல்றாங்க. இதைக் கேட்கவே ரொம்ப சந்தோஷமா இருக்கு. உண்மையில அவங்களுக்கு இப்போ நடக்குற அரசியல் பிடிக்கவே இல்லீங்க. அவங்க ஒரு புதிய பாணி அரசியலைத் தேடி என் கட்சிக்கு வர்றாங்க. அப்படி மாற்றுக் கட்சியில இருந்து வர்றவங்க ஏற்கெனவே அவங்க இருந்த கட்சிகள்ல பாதிக்கப்பட்டு வெறுத்துப் போய் இருக்கறவங்களாத் தெரியறாங்க. அவங்களுக்கு ஏதாவது செய்தே ஆகணும்ங்கற பொறுப்பும் பயமும் எனக்கு வந்திருக்கு. ஆனா என் கட்சிக்கு வர்றவங்க ஒழுக்கமாவும், கட்சியோட கொள்கைக்குக் கட்டுப்பட்டும் 'நடந்துக்கணும்ங்கறதுதான் என்

னோட எதிர்பார்ப்பு."

**கட்டுப்பாடு, ஒழுக்கம்னு சொல்ற நீங்க ஊழல் செய்தவங்களுக்குக் கட்சியில் இடம் கொடுத்திருக்கீங்களே...**

"எங்க கட்சியில பொன்னுசாமி வந்த பிறகுதான் இப்படிச் சொல்றாங்க. முந்தின கலைஞர் ஆட்சியில குற்றம் சாட்டப்பட்ட செட்டப்பட்டி முத்தையாவும், இந்திரகுமாரியும் இப்போ தி.மு.க.வுலதானே இருக்காங்க. பொன்னுசாமி செய்த தப்புக்கு நீதிமன்றம் தண்டனை கொடுத்து அதை அவரும் முழுசா அனுபவிச்சுட்டாரு. தண்டனை கொடுக்கறது எதுக்கு? தப்பு பண்ணினவங்க திருந்தறதுக்குத் தானே! பிறகு ஏன் கட்சியில சேர்க்கக் கூடாதுன்னு கேட்கறேன்."

**இன்றைக்கு எந்த அரசியல் தலைவரின் பேட்டியிலும் உங்களைப் பற்றி ஒரு கேள்வியாவது தவறாமல் இடம் பெறுகிறதே...**

"நான் அவங்களை நினைச்சுக் கட்சி ஆரம்பிக்கல. அதனால அவங்களோட விமர்சனங்களைப் பத்தி நான் கவலைப்படறதில்ல. அவங்க குறை சொல்றதையும் நான் பெருசா எடுத்துக்கறதில்ல. என்னோட சிந்தனை முழுக்க முழுக்க மக்கள் தொடர்பானது."

**சட்டமன்ற, உள்ளாட்சித் தேர்தல்களின் முடிவை வைத்து உங்கள் தேர்தல் அணுகுமுறையை மாற்றிக் கொள்ளும் எண்ணம் வந்திருக்கிறதா?**

"கூட்டணி வைக்கப் போறீங்களான்னு கேட்கறீங்களா? கண்டிப்பா மாட்டேன். பன்னிரண்டு வயசுல இருந்து அரசியல்ல இருக்கேன். இடையில பதினைஞ்சு வருஷம் முழு மூச்சா சினிமாவுல இருந்துட்டேன். ஆனாலும் அரசியலை உன்னிப்பா கவனிச்சுட்டுதான் வந்தேன். அதனால எனக்குக் கூட்டணி தேவையில்லன்னு தான் தோணுது. சமீபத்துல பண்ருட்டியார்கூட ஒரு கூட்டத்துல சொன்னார், 'எங்க கேப்டனுக்குச் சாப்பாட்டுல பொறியல், வறுவல் எல்லாமே பிடிக்கும். ஆனா கூட்டு மட்டும் பிடிக்காது'ன்னு. அதுதான் உண்மை!"

**நடுத்தர மற்றும் மேல்தட்டு மக்களைக் கவர என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?**

"என்னோட திட்டங்களை வெளில சொன்னா அதை மத்த கட்சிக்காரங்க எடுத்துக்கிட்டு, 'நான்தான் செய்தேன்'னு சொல்லிடறாங்க. எங்களுக்கு மேல்தட்டு, நடுத்தர மக்களோட ஆதரவு இல்லாமலா அத்தனை சிட்டியிலயும் இவ்ளோ வோட்டு வாங்கியிருக்கோம். அதேபோல கீழ்த்தட்டு மக்கள் அவங்களுக்கு வோட்டுப் போடாம எனக்குப் போட்டிருக்காங்கன்னா இந்தக் கட்சிகள் கீழ்த்தட்டு மக்களுக்கு எதுவுமே செய்யலன்னுதானே அர்த்தம்! எல்லாத் தரப்பு மக்களுமே இப்போ மாற்றத்தை

• இலங்கை அகதிகளுடன்...



விரும்பறாங்க. அதனால எல்லோருமே எனக்கு ஆதரவு தர்றாங்கங்கறதுதான் உண்மை."

**காங்கிரஸ், பாரதிய ஜனதா போன்ற தேசியக் கட்சிகளைப் பற்றிய உங்கள் பார்வை...**

"மாநில கட்சியோட முதுகுல ஏறி சவாரி பண்ணினா அதுக்குப் பேரு தேசிய கட்சியா? தனிச்சு நின்னு தேர்தலைச் சந்திச்சாதானே அவங்களோட பலம் தெரிய வரும். அப்படிச் செய்யாம இன்னொரு மாநில கட்சியோட கூட்டு வச்சுக்கிட்டு நாங்க பெரிய தேசியக் கட்சின்னு சொல்லிக்கறதுல என்ன பெருமை இருக்குன்னு கேட்கறேன். அப்படிச் செய்தா அவங்களைப் பத்திப் பேசலாம்."

**ஈழத்தமிழர் விவகாரத்தில் நீங்கள் வலுவாகக் குரல் கொடுப்பதில்லை என்கிற விமர்சனத்துக்கு என்ன சொல்கிறீர்கள்?**

"இன்னிக்கு இருக்குற அரசியல்வாதிங்க சும்மா நான், நீன்னு போட்டி போட்டுட்டு இலங்கைப் பிரச்னையை அரசியலாக்கறாங்க. நான் ஈழத்தமிழர் பிரச்னைக்காக மூணு தடவை உண்ணாவிரதம் இருந்திருக்கேன். சிலோன் ஹை கமிஷனுக்கு முன்னால போராடியிருக்கேன். பெரியார் திடல்ல ஈழத்தமிழர்களுக்காக நாடகம் நடத்தி, கலெக்ஷன் பண்ணிக் கொடுத்திருக்கேன். கடந்த பதினைஞ்சு வருஷமா நான் பிறந்த நாளே கொண்டாடறதில்ல. அங்கே சுனாமி வந்தப்போ என்னைத் தவிர வேற யார் நிதி கொடுத்தாங்க? என்னோட படங்கள்லயும் ஈழத் தமிழர் பிரச்னையை எடுத்துச் சொல்லியிருக்கேன். இதோ இந்த 'சபரி' படத்துல ஈழத்தமிழர் பிரச்னையைப் பற்றிய மெஸேஜ் உண்டு. ஆனா இந்த அரசியல்வாதிங்க இந்திய அரசு தலையிடணும்னு சொல்றாங்க... ஏற்கெனவே அமைதிப்படை போய் என்ன நடந்துச்சு? 'ஈழப்போராட்டம் மண்ணுக்காக நடக்கும் போராட்டம்... நிச்சயம் ஜெயிச்சே தீரும்'ங்கற நம்பிக்கை எனக்கு இருக்கு."

**'குடிகாரர்' போன்ற விமர்சனங்களை எப்படி எதிர்கொள்கிறீர்கள்?**

"அவங்களோட விமர்சனத்தை நான் மறந்துட்டேன்; மன்னிச்சுட்டேன். அவ்வளவுதான். இப்போ என் கட்சியை எப்படி வளர்க்கறதுங்கறதுலதான் என்னோட கவனம் இருக்கு. எப்படிப்பட்ட விமர்சனத்தையும் என்னால சுலபமா தாங்கிக்க முடியும்."

**வைகோவுக்கு ஆதரவாக நீங்கள் சமீபத்தில் கருத்துக் கூறியதாகச் செய்திகள் வந்தனவே...**

"சொந்தக் கட்சிமேல நம்பிக்கை இல்லாதவங்கதான் மத்த கட்சிகளை உடைப்பாங்கன்னு சொன்னேன். அப்புறம் எதுக்கு வம்புன்னு அதோட நிறுத்திக்கிட்டேன். ஏன்னா நான் கட்சி ஆரம்பிச்சே ஒரு வருஷந்தான் ஆகுது."

**கட்சி ஆரம்பித்த பிறகு உங்கள் படங்களில் அரசியல் நெடி சற்றுத் தூக்கலாக இருக்கிறதே?**

"அரசியல் விஷயங்களை என் சொந்தப் படத்துலதான் வச்சுப்பேன். வெளிப் படத்துல அவங்க விருப்பத்தோட வைப்பேன். பிடிவாதமாக மறுத்தால் நானே சொந்தப் படம் எடுத்துவிடுவேன்."

**- ஆர்.முத்துக்குமார்**
**படங்கள் : ஸ்ரீஹரி**

"உன் மாமியார் கிணற்றிலே தவறி விழுந்திட்டாங்களாமே!"

"இல்லியே... சரியாத்தானே விழுந்தாங்க."

- ஆ.விஜயலக்ஷ்மி, திருச்சி







இது புதுசு

# கொசு

பா. ராகவன்

கழுதையின் முதுகிலிருந்து மூட்டையை இறக்கிக் கீழே போட்டாள் பொற்கொடி. அனந்தபுரி எக்ஸ்பிரஸ் பாலத்தில் தடதடத்துக் கடந்துபோனது. கீழே நகர்ந்துகொண்டிருந்த நீரில் துண்டை விரித்து மீன் பிடித்துக் கொண்டிருந்த நான்கு பொடியன்களும் அண்ணாந்து பார்த்துக் கையசைத்தார்கள். ஓடும் ரயிலின் ஜன்னல் வழியே யாரோ கழுவித் தெளித்த நீரின் துளிகள் காற்றில் அலைந்து ஆற்றில் உதிர்ந்தன.

"பொற்கொடி, முத்துராமனுக்குப் பொண்ணு பாக்கப் போறாங்களாம்டி. வூட்டு வாசல்ல குவாலிஸ் வந்து நிக்குது. அல்லாரும் கௌம்பிக்கினுகீறாங்க. பெர்சு நம்மாண்டல்லாம் சொல்லிச்சா பாத்தியா? போயி நாக்கப் புடுங்கறமாதிரி நாலு வார்த்த கேக்கத் தாவல? இங்க இன்னா பண்ணிக்கினுகிற?"

அவிழ்த்துக் கொண்டிருந்த துணி மூட்டையை மீண்டும் சேர்த்துக் கட்டி அதன்மீதே உட்கார்ந்தபடி நிமிர்ந்து பார்த்துச் சிரித்தாள் பொற்கொடி. புசுபுசுவென்று மூச்சுவாங்க நின்று கொண்டிருந்தாள் வளர்மதி.

"கண்டுகினு தானே வரப் போறான்? இப்பவேவா கொண்டுகினு வந்துருவான்? போவட்டும், விடு. நாலு தபா பொண்ணு பாக்கறோம் பேர் வழின்னு போயி காரியம் கைகூடாம வந்தாங்கல்ல? அந்த நெனப்பா இருக்கும். இந்த வாட்டியாச்சும் நல்லபடியா முடிஞ்சா சரி. காலீலயே நெனச்சேன். அவன் ஆத்தாக்காரி கடும்பாடியம்மன் கோயில்ல சுத்திக்கினு இருந்தா. இன்னாடா இது, திருவிழான்னாக்கூட கோயில் பக்கம் வராத பொம்பள இப்பிடி உருகி உருகி சுத்துதேன்னு பாத்தேன்."

எதிர்பார்த்த பதில் வராததால் வளர்மதிக்குச் சற்று ஏமாற்றமாக இருந்தது. விட்டுவிட முடியுமா என்ன?

"போடி இவளே... அத்தினி பேரும் முத்துராமன் வீட்டாண்டதான் நின்னுக்கினுகிறாங்க. கட்சிக்காரப் பசங்க இந்த வாட்டி வீரத்திலகம் வெச்சி அனுப்பறதா ப்ளான் போட்டிருக்கானுக. செம காமடிதான் போ."

பொற்கொடிக்குச் சிரிப்பு வந்தது. வீரத்திலகம். அ, அருமையான யோசனை. இதற்குமுன் ஏன் யாருக்கும் இது தோன்றாமல் போய்விட்டது? அவளுக்குத் தெரிந்து முத்துராமன் நான்கு முறை பெண் பார்க்கப் போய்விட்டு வந்திருக்கிறான். கிளம்புகிற ஜோர் பெரிதாகத்தான் இருக்கும். பேட்டையே அமர்க்களப்படும். திரும்பி வரும் போதே மாலையும் கழுத்துமாகத்தான் வருவான் என்பது போன்ற தோற்ற மயக்கம் அவசியம் உண்டாகிவிடும். கட்சி வேட்டி, கட்சித் துண்டுடன் அவனும் அவன் அப்பா, சித்தப்பா வகையறாக்களும். கம்பீரமாக வாடகை குவாலிஸில் ஏறி உட்காருகிற தோரணை என்ன, அவன் அம்மா அலட்டுகிற அலட்டல் என்ன, திருஷ்டி கழிக்கிற ஜோரென்ன, அவன் தங்கை முகத்தில் பொங்கி வழியும் பெருமிதமென்ன...

சந்தேகமில்லாமல் காலனியில் முத்துராமனின் வீடு ஒரு தனித் தீவு. அபூர்வமாக அவனை மட்டும் வீட்டில் படிக்க வைத்தார்கள். பன்னிரண்டாம் வகுப்பு பொதுத் தேர்வு சமயம் திருச்சியில் ஏதோ கட்சி மாநில மாநாடு என்று ரயிலேறிப் போய்விட்டான். ஆத்தாக்காரிதான் ஊரெல்லாம் கூட்டி ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள்.



இந்தப் புள்ளைக்கு ஏன் இப்படிப் போகிறது புத்தி?

''அட... இவ ஒருத்தி வெளங்காதவ. தமிழரசன் புள்ளைக்குப் புத்தி வேற எப்படிப் போவும்? இவங்கப்பன் ரயிலுக்கு முன்னால தலவெச்சி ரெண்டு வாரம் ஜெயிலுக்குப் போயி இருந்துட்டு வந்தவன் தானே? வேறெப்படி இருப்பான்?''

முத்துராமன் பொதுத் தேர்வு எழுதாததைப் பற்றி அவனது தந்தை ஏதும் விசாரிக்கவில்லை. "கூட்டத்துக்குப் போறன்னா சொல்லிட்டுப் போவறதுதானடா தறுதல? பஸ்ஸுக்கு சில்ற கூட கேக்காம அப்பிடி என்னா அவசரம் ஒனக்கு?''

''பஸ்ஸுல போவலப்பா. செங்கல்பட்டு வரைக்கும் ரயில்ல போனேன். அங்கேருந்து லாரில போயிட்டோம். எட்டு லாரிங்க. அறுநூறு பேரு. சோத்துப் பொட்டலம் குடுத்துட்டாங்க. தண்ணி பாக்கெட் இருந்திச்சி. ஒண்ணும் கஷ்டம் இல்லப்பா.''

"தலைவரு சூப்பரா பேசினாரா?''

அருகே வந்து உட்கார்ந்து ஆர்வமுடன் கேட்டார் தமிழரசன்.

அவர் போகாத பொதுக்கூட்டங்களா? விடிய விடிய குத்துக்காலிட்டு உட்கார்ந்து கேட்காத சொற்பொழிவுகளா? வாங்காத கல்லடிகளா? காலம் அவரது காலை உடைத்து உட்கார வைத்திருந்தது. காப்பிக்குக் கூட சர்க்கரை போட்டுக் கொள்ள வழியில்லைதான். ஆனாலும் சர்க்கரை நோயாமே?

ஒரு மாவட்டச் செயலாளராகும்

கனவு அவருக்கு ஐம்பது வயது வரை இருந்தது. சைதாப்பேட்டை அளவிலேயே முன்னிலைக்கு வர முடியாமல் போய் விட்டதற்கு யாரைக் காரணம் சொல்வ தென்று தெரியவில்லை. கடவுளைச் சொல்லலாம்.

"ஏன் கற்பகம், ஒருவேளை மெய்யாவே கடவுள் இருந்துட்டாருன்னா, செத்தப் பறம் என்னிய டீல்ல வுட்டுடுவாரோ? அந்த... சொர்க்கம், அது இதுங்கறாங் களே... அங்கெல்லாம் நம்மள சேக்கமாட் டேன்னு சொல்லிருவாங்களோ?"

"பின்ன? நீ செத்தா ஆவியாத்தான் அலையப்போற. இதுல இன்னா சந்தேகம். இதே ஆத்தங்கரையிலதான் சுத்திக்னு இருப்ப. ஏந்தலையெழுத்து, அப்பவும் உன்னாட லோல் படணும்னு இருக்கோ, என்னமோ?"

முத்துராமனின் அம்மா இந்த விஷ யத்தில் மிகவும் தெளிவானவள். பிறந்து, புகுந்த குடிசைகள் இரண்டும் அடுத்தடுத்த சந்துகளிலேயே இருந்துவிட்டதில் வாழ்க் கையில் பெரிய மாறுதல்கள் எதையும் அவள் பார்த்ததில்லை. அவளது அப்பா காங்கிரஸ் அனுதாபி. சுதந்திர தினத்துக்கு மட்டும் வெள்ளைச் சட்டை போட்டு, கொடி குத்திக்கொள்கிற ஆசாமி.

"போவுதுபோ... குடிச்சி சீரழிஞ்சி சுருண்டு கெடக்காம கட்சி, கட்சின்னு தானே அலையுதுங்க? அதுக்கு இது எவ் ளவோ மேல்" என்று சொல்லிவிட்டுப் போய்விடுவாள். குடித்துச் சீரழிந்த சரித் திரக் கதைகள் அவளது வம்சத்தில் நிறைய இருந்தன. தனக்குப் பிறந்ததாவது படித்து முன்னேறுமா என்று கொஞ்ச நாள் கனவு கண்டுகொண்டிருந்தாள். முத்துராமன் பன்னிரண்டாம் வகுப்புடன் முடித்துக்கொள்ள, அடுத்துப் பிறந்த இரண்டும் ஐந்தைத் தாண்டவே அடம் பிடித்ததில், அவள் கனவுகளைச் சுருட்டி அடையாறில் எறிந்துவிட்டு, கடனுக்குத் தையல் மிஷின் ஒன்றை வாங்கி வீட்டில் போட்டு வேலை பார்க்கத் தொடங்கி விட்டாள்.

என்ன செய்து யாரைத் தடுத்துவிட முடியும்? முத்துராமனைப் பின்பற்றி அவன் தம்பி தமிழ்க்கனல் கட்சிக் கூட் டங்களுக்கும் ஊர்வலங்களுக்கும் போகத் தொடங்கியபோது கற்பகம் மறக்காமல் தினத்தந்தி பேப்பரில் நாலு இட்லி வைத்து மடித்துக் கொடுத்து அனுப்பத் தொடங்கினாள். தேர்தல் காலங்களில் அவர்கள் இரவு பகலாக வீட்டுக்கு வரா மல் கட்சி அலுவலகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது, தானே தேடிப்போய் சாப்பாடு கொடுத்துவிட்டு வர ஆரம்பித் தாள்.

எதற்கும் இருக்கட்டும் என்றுதான் அவள் எப்போதாவது கையில் கொஞ்சம் காசு இருக்கும்போது கடும்பாடி அம் மனுக்கு அரை லிட்டர் பால் பாக்கெட் எடுத்துப் போய் அபிஷேகத்துக்குக் கொடுத்துவிட்டு, கன்னத்தில் போட்டுக் கொண்டு வருகிறாள். இப்போதெல்லாம் முன்னைப்போல் கடவுளே இல்லை என்று புருஷன்காரன் அழிச்சாட்டியம் பண்ணுவதில்லை.

குவாலிஸ் புறப்பட இருந்த சமயம் பொற்கொடியும் வளர்மதியும் வேகமாக ஓடி வந்தார்கள்.

"டேய் முத்துராமா... கொஞ்சம் இருடா... பொண்ணு பாக்கப் போறி யாம்லே?" என்று இடுப்பில் தயாராக முடிந்து வைத்திருந்த குங்குமப் பொட்ட



"நீங்க இன்பேஷண்ட்டா? அவுட் பேஷண்ட்டா?"
"டவுட் பேஷண்ட் டாக்டர்... பிழைப்பேனா இல்லையான்னு ஒரே டவுட்டா இருக்கு!"
- பம்மல் நாகராஜன்

''மன்னா! மஹாராணியார் தங்களைத் திட்டுவார்களா?''

''சேச்சே... பேச்சு வார்த்தைகளி லெல்லாம் அவளுக்கு நம்பிக்கை கிடையாது!''

– லீலாஜி



லத்தை எடுத்து அவன் சற்றும் எதிர் பாராதவிதத்தில் நெற்றியில் தீற்றினாள் வளர்மதி.

அவன் சிரித்தான். "இரு, ஒன்ன வந்து கவனிச்சிக்கறேன்.'

"த... தள்ளிப்போ. சும்மா சுவாங்கு வான்னுக்கிட்டு. வந்து பேசிக்கறேன். நீ ஏறுடா..." என்று போலியாகச் சிடுசிடுத்து அவனை வண்டிக்குள் தள்ளினாள் கற்பகம். வீதி நிறைத்து நின்ற ஜனம் கையசைத்தது. பொற்கொடியும் கையசைத்தாள். ஆனாலும் ஏனோ அவன் முகத்தை நேராக அவளால் பார்க்க முடியவில்லை.

தான் வந்திருக்கவே வேண்டாம் என்று நினைத்தாள். இந்நேரம் அத்தனைத் துணிகளையும் அலசிப் போட்டிருக்கலாம். இந்தச் சனியன் பிடித்த வளர்மதியால் வந்த வினை. கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்துவிட்டாள். எதற்காக வர வேண்டும்?

எப்படியாவது இம்முறை முத்துராமனுக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட வேண்டும் என்று அவள் மிகவும் விரும்பினாள். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இப்படி படை திரட்டிக் கொண்டு போகிற அவஸ்தையிலிருந்து அவன் தப்பிப்பதற்காக மட்டுமல்ல. அதற்குப் பிறகாவது தனக்குள் ஓயாமல் கேட்டுக் கொண்டிருக்கும் மௌன ஓலத்தை அடக்கிச் சுருட்டி அழுத்திப் புதைக்கவும் கூட.

ஆற்றங்கரைக்குத் திரும்பப் போகிற வழியெங்கும் அவள் அதையேதான் நினைத்துக் கொண்டிருந்தாள். 'இந்த முறை எக்மோர் பெண்ணாமே? அடையாற்றுக் கரைவாசிக்குக் கூவக்கரைப் பெண் சரியாகத்தான் இருக்கும். பளபள வென்று குவாலிஸில் போய் இறங்கும் முத்துராமன். குடிசை வாசலில் பெஞ்சு போட்டு உட்கார வைப்பார்களாயிருக்கும். பின்னே இத்தனை கூட்டத்துக்கு உள்ளே எங்கிருந்து இடம் இருக்கும்? த... சட்னு போயி ஆறு டீ வாங்கியா... யாரோ, யாரையோ விரட்டுவார்கள். யார் அந்தப் பெண்? கையில் டீ க்ளாஸுடன் வந்து முத்துராமன் எதிரே குனிந்த தலையுடன் எப்படி நிற்கப் போகிறாள்? என்ன சேலை உடுத்தியிருப்பாள்? அவளைப் பெற்றவள் நல்லவளாக இருக்க வேண்டும். முத்துராமனை அவன் அடிக்கடி கிண்டல் செய்திருக்கிறான். பாத்துக்கினே இரு. சினிமாவுல வர காந்திமதியாட்டம் ஒனக்கு ஒரு மாமியாக்காரி வந்து நிக்கப்போறா. கட்சியும் வேணாம், ஒரு கருமாந்திரமும் வேணாம்னு மெரட்டப் போறா. பொண்ணைக் கட்டின பாவத்துக்கு 'சர்தான் அத்த'ன்னு சுருண்டு நிக்கப் போற...'

முத்துராமன் இதற்கெலாம் பதில் சொன்னதில்லை. வெறுமனே சிரிப்பான். எல்லோருக்கும் எப்போதாவது ஒரு நாள் திருமணம் ஆகத்தான் போகிறது. யாரோ ஒரு பெண். எங்கிருந்தோ வரப் போகிறவள்.

முத்துராமன் விஷயத்தில் அது ஏன் தானாக இருக்கக் கூடாது என்றுதான் பொற்கொடி நினைத்தாள். 'வேணாம்டி, நெனப்ப அழுத்தித் தொடச்சிரு' என்று அம்மா சொன்னபோது அழக்கூடத் தோன்றவில்லை. துடைத்துத்தான் ஆக வேண்டும். ஆனால் அவனுக்குத் திருமணம் ஆகும்வரை தள்ளிப்போட்டால் தப்பில்லை என்று தோன்றியது.

(தொடரும்)





# 'பொங்கலோ

பொங்கல்
புதுப்பானை பொங்கல்
பட்டிப்பெருக பால்பானை பொங்க
ஆத்தா வாசலிலே ஆவாரம் பூச்செருக
மாரியாயி வாசலிலே மகிமை பொங்க
கட்டுக்கு அடங்காத
காளியாத்தாளுக்கு
நெட்டுக்கு வைங்கடி பொங்கப்பானை
பொங்கலோ பொங்கல் பொங்கி
வருகுது
போடுங்கடி ஒரு பொன்குலவை!

நாட்டுப்புற இசையில் பொங்கல் பாட்டை சந்தோஷம் பொங்கப் பாடி நம்மை வரவேற்றனர் விஜயலட்சுமி - நவநீதகிருஷ்ணன் தம்பதி.

"இதுவரைக்கும் ஏழாயிரம் ஒலி நாடாக்களில் நாட்டுப்புறப் பாடல்களைச் சேகரித்து வைத்திருக்கிறோம். பல நல்ல, சமூக அ… தொகுத்துப் பத்துக் குறுந்தகடுகளை வெளியிட்டுள்… போது பாடும் ஏற்றப்பாட்டு, மோட்டார் பம்ப்… போச்சு. உழவுப்பாட்டு, டிராக்டர் சக்கரங்களுக்கு… வடைப் பாட்டு, அறுக்கும் எந்திரத்தோடு அறுந்த… மட்டும் இன்னும் எந்திரம் வரவில்லை. அதனால் கொஞ்சம் எஞ்சியிருக்கு" என்று வருத்தத்தோடு பே… அனுபவத்தினால் அவர்களுடைய முகங்களில் …

நாம உணராத நம்ம மண்ணோட பாட்டை ஆராய்ச்சி செய்ய தென் கொரியாவிலிருந்து ஒரு பொண்ணு வந்திருந்தாங்க. 'வங்காளத்திலிருந்து கன்யாகுமரி வரை நடவுப் பாடல்கள்' என்பதுதான் அவங்களோட ஆய்வு. மேற்கு வங்காளம், ஒரிசா, ஆந்திரான்னு ஆராய்ச்சி செய்து தமிழகத்துக்கு வந்திருந்தாங்க. தேனி பக்கத்தில் சில கிராமங்களுக்கு அவங்களை அழைச்சுட்டுப் போனேன். ஒரு வருஷம் கழிச்சு அந்தப் பொண்ணு தன் ஆராய்ச்சிப் புத்தகத்தில் நம்முடைய நாட்டுப்புறப் பாடல்களுக்கான இசைக் குறியீடுகளை வரையறுத்து, அனுப்பியிருந்தாங்க தென்

யுள்ள பாடல்களைத்
. தண்ணீர் இறைக்கும்
'த்தத்தில் காணாமல்
நண்டு போச்சு. 'அறு
ச்சு. நாத்து நடறதுக்கு
ப் பாட்டுகள் மட்டும்
லும், அடுத்துக் கூறிய
பயில்லா மகிழ்ச்சி.



கொரியாவில் நம் பாடல்கள் என்று நினைக்கும்போதே எத்தனை சந்தோஷமாக இருக்குது!

# போடுங்க பொன் குலவை!

இருபத்தேழு வருஷமா தொடர்ந்து நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி ஆராய்ச்சியும், இருபத்தியோரு வருஷமா மேடை நிகழ்ச்சிகளும் செய்துட்டு வர்றோம். எங்கள் முதல் அனுபவத்தை மறக்க முடியாது. 1985-ஆம் வருஷம் மதுரை வானொலி நேயர்கள் மத்தியில குருவித்துறை கிராமத்துல எங்க முதல் நிகழ்ச்சி. அங்க பாடின 'ஒண்ணாம் படியெடுத்து'ங்குற பாட்டு தமிழகப் பட்டிதொட்டியெல்லாம்

பரவியது.

மறக்க முடியாத அனுபவம்னும் ஒண்ணு இருக்கு. சில வருஷங்களுக்கு முன்பு மதுரை மீனாட்சி அம்மன் கோயில் நவராத்திரி விழாவில் கிருஷ்ண லீலை நாடகத்துல, பிருந்தாவனக் கோலாட்டம் ஆடினப்போ, கிழக்குயில் குடி பெரியசாமிக் கோனார்ங்கிற எண்பது வயசு பெரியவர் ஒருவர் மேடையேறி எங்களைக் கட்டித் தழுவி, அவர் போட்டிருந்த ரத்தினக் கடுக்கணைக் கழட்டி எங்க காதுகள்ல மாட்டி விட்டதை என் நாளில் மறக்க முடியாது.

ஒவ்வொரு பாட்டுக்கும் நாங்க



ரொம்ப மெனக்கெடுவோம். சமீபத்துல ஒரு பாட்டோட முதல்வரி கிடச்சது. அதோடு முடுகு (தொடர்) தேடி ஒன்றரை வருஷமா அலைஞ்சோம்.

*'கானக் கரிசலிலே*
*களையெடுக்கும் பூ மயிலே*
*நீளத் தரிசலிலே*
*நிக்கட்டுமா? போகட்டுமா?'*

- இதோட முடுகு தேடி பல கிராமங்கள்ல அலைஞ்சோம். ஒரு ஊர்ல

*'நிக்கச் சொன்னா*
*நேரஞ் செல்லும்*
*போகச் சொன்னா*
*பொல்லாப்பு*
*நானொருத்தன் தேவியரு*
*நானெத்தைச் சொல்லுறது'*ங்கற முடுகு கிடைச்சது. ஆனால் பொருள் திருப்தி அளிக்கல. திரும்பவும் அலைஞ்சோம்.

*'நிக்கச் சொன்னா*
*நேரஞ் செல்லும்*
*போகச் சொன்னா பொல்லாப்பு*
*என் புருஷன் கோவக்காரன்*
*ஓடவிட்டுக் குத்திடுவான்!'*

என்ற முழுகு கிடைச்சது. இதோ பொருளும் திருப்தியா இல்ல. சளைக்காமல் பல ஊர்கள் அலைந்து திரிந்ததில் இறுதியா வயல்வேலை செய்துகிட்டிருந்த ஒரு பொண்ணு அழகான விளக்கமும் கொடுத்து, முடுகும் பாடிக் காட்டுச்சு.

*'நிக்கச் சொன்னா*
*நேரஞ் செல்லும்*
*போகச் சொன்னா*
*பொல்லாப்பு*
*நிக்குறதும்*
*போகுறதும்*

உங்க பிரியம்... சொல்ல மாட்டேன்!'ன்னு ஒரு பொண்ணு தன் மாமன் மகனைப் பார்த்துப் பாடுற பாட்டு இது.

இந்த வாய்மொழி இலக்கியங்கள் சமூக வாழ்வின் அடிநாதங்கள் தாலாட்டில் தொடங்கி ஒப்பாரி வரைக்குமான நாட்டுப்புறப்பாடல்கள் நாகரிகத்தின் வரிவடிவங்கள். நாட்டில் விவசாயம் இருக்கும்வரை, பொங்கல் பண்டிகை, மாநிலத்துக்கு ஒரு பெயரோடு இருக்கும். அதேபோல் நாட்டுப்புறப் பாடல்கள் ஏதேனும் ஒரு வடிவத்தில் வலம் வந்து கொண்டுதான் இருக்கும்'' விஜயலட்சுமி நவநீதகிருஷ்ணன் தம்பதி பேசிக் கொண்டிருக்கும்போதே ஒலிக்கிறது - தொட்டில் கானம்:

*'கண்ணே நீயுறங்கு*
*கானகத்து மயிலுறங்கு*
*பொன்னே நீ யுறங்கு'*
*பூமரத்து வண்டுறங்கி''*

•

- கட்டுரைச் சித்திரம்:

**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# வேண்டுகோள்!



**மாஸ்டர் பா.ஜகதீஸ் கண்ணா**

எனது மகன் **பா.ஜகதீஸ் கண்ணா, வயது 5** இருபுற உட்செவி பாதிப்பால் காதும் கேட்கவில்லை. வாய் பேசவும் இயலவில்லை. இக்குறைபாடுகளை நீக்க **'உட்செவிப்பகுதி பதித்தல்'** அறுவை சிகிச்சை **(Cochlear Implantation)** விரைவில் செய்ய வேண்டும் என மருத்துவர்களால் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதற்கான கருவி ஆஸ்திரேலியாவிலிருந்து பெறப்பட வேண்டும். இச்சிகிக்சையை செய்ய ஆகும் செலவு ரூ.8,00,000/- (ரூபாய் எட்டு லட்சம்) ஆகும். இச்சிகிச்சையை செய்தால் தான் அவனால் **காது கேட்கவும், வாய் பேசவும்** இயலும். நான் நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்தவன். என்னால் இவ்வளவு பெரிய தொகைக்கு சிகிச்சையை மேற்கொள்ள இயலாத நிலையில் உள்ளேன். எனவே, தங்களைப் போன்ற உதவும் உயர்ந்த உள்ளங்கள் நன்கொடை வழங்கி சிகிச்சை மேற்கொள்ளவும், அவனது வருங்காலம் சிறப்பானதாக அமைவதற்கும் உதவி புரிய வேண்டுகிறேன். நன்கொடைகளுக்கு 80ஜி செக்ஷன்படி வருமான வரி விலக்கு உண்டு. நன்கொடையை **"MADRAS ENT RESEARCH FOUNDATION CHARITABLE TRUST A/C P.JAGATHESH KANNA"** என்ற பெயரில் செக் அல்லது டி.டி. எடுத்து கீழ்க்கண்ட மருத்துவமனை முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

மருத்துவமனை முகவரி :
பத்மஸ்ரீ டாக்டர் **மோகன் காமேசுரவன்,**
சென்னை இ.என்.டி. ஆராய்ச்சி நிறுவனம் (பி) லிமிடெட்,
எண்.1 முதல் குறுக்குத் தெரு, இரண்டாவது மெயின்ரோடு,
இராஜா அண்ணாமலைபுரம், சென்னை - 600 028. தமிழ்நாடு, இந்தியா.
தொலைபேசி : 91-44-24311411 முதல் 24311415 வரை உள்ள எண்கள்
பேக்ஸ் : 91-44-24311416

தங்கள் உதவியை எதிர்பார்க்கும் அன்பன்,
**ரெ.பால்கண்ணன்,**
மொபைல் : 9344667889



“

தமிழ்ப் பத்திரிகை உலகில் கல்கிக்கு என்று ஒரு கௌரவமான இடம் உண்டு. நான் நடித்த படங்களின் விமர்சனம் கல்கியில் வெளிவரும்போது அதில் சுட்டிக் காட்டப்படும் நிறை, குறைகளை நான் கவனமாகப் படிப்பேன். அந்த மரியாதைக்குரிய பத்திரிகையின் வாயிலாக உங்கள் அனைவருடனும் பேசுவதற்கு நான் பெருமைப்படுகிறேன். 'இவன் என்னடா! நேத்து வந்த பையன்! அஞ்சாறு படம் நடிச்சிருக்கான்; அதுக்குள்ள தொடர் எழுத வந்துட்டான்!' என்று உங்கள் மனசுல ஒரு கேள்வி எழலாம். அது நியாயமானதுதான். ஆனால், ஏதோ பெருசா சாதனை பண்ணிட்டதா நான் நினைக்கலை. நீங்களும் என்னை ஏதோ ரொம்பப் பெரிய ஆள்னு நினைச்சுக்காதீங்க! நான் ரொம்ப சிம்பிளானவன்; உங்க வீட்டுப் பிள்ளை மாதிரி. ஆரம்பிக்கலாமா? ஜூட்!

சென்னையில் ஜன சந்தடி மிகுந்த மேற்கு மாம்பலம். நெரிசலான தெருவின் நாலு மாடிக் கட்டடம். அது பேச்சிலர்கள் வசிக்கிற ஒரு மேன்ஷன். மொட்டை மாடியில் இருக்கும் தண்ணீர்த் தொட்டியின் மேலே ஓர் இளைஞன் நின்று கொண்டிருக்கிறான். "கீழே ஏராளமான மக்கள் கூடி மொட்டை மாடியில் நிற்கிற இளைஞனையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். தான் தற்கொலை செய்து கொள்ளப் போவதற்கான காரணம் என்ன என்று அவன் விளக்கம் கொடுத்து விட்டு, கீழே குதிக்கத் தயாராகிறான். அந்த இளைஞன் வேறு யாருமில்லை; நானேதான்!

நான் இப்போது நடித்துக் கொண்டிருக்கும் 'தமிழ் எம்.ஏ.' படத்தில் இடம்பெறுகிற ஒரு காட்சிதான் இது. படத்தை இயக்குபவர் ராமசுப்பு. டைரக்டருக்கு இதுதான் முதல் படம். பாலுமகேந்திரா உட்பட சில பிரபல டைரக்டர்களிடம் அசிஸ்டென்ட்டாக இருந்தவர்.

சுமார் ஐம்பது, அறுபது அடி உயரத்திலிருந்து நான் குதிப்பது போன்ற காட்சி. டைரக்டர், 'ஜீவா! ரிஸ்க் எடுக்கணுமா? டூப் போட்டுடலாமே!' என்று கேட்டார். நான் முதலில் பயந்தாலும், பிறகு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, 'நானே பண்ணிடுறேன் சார்!' என்று டைரக்டரிடம் சொல்லிவிட்டேன். அவரும் ஸ்டண்ட் மாஸ்டரிடம் பேசி, எனக்குப் பச்சைக் கொடி காட்டினார்.

அந்த மேன்ஷனுக்கு முன்னால் தரையில் நான் நிற்கிறேன். எதிரில் ஏராளமான மக்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தக் காட்சியில் நடிப்பதற்காக என்னைத் தயார்




# டிஷ்

செய்தார் ஸ்டண்ட் மாஸ்டர். கம்பிக் கயிறுகள் கொடுத்துத் தயாரிக்கப்பட்ட ஸ்பெஷல் ஜாக்கெட் ஒன்றை உள்ளே அணிந்து, அதற்கு மேலே அந்தக் காட்சிக்குரிய என் காஸ்ட்யூமை நான் அணிந்து கொண்டிருந்தேன். இறுக்கக் கட்டப்பட்டிருந்ததால், ஒவ்வொரு கம்பிக்

1

பட்டிருந்த ஒரு ராட்சத கிரேனில், என் உடம்பில் பொருத்தப்பட்டிருந்த கொக்கிகளை இணைக்கும் இரும்புக் கயிறு இணைக்கப் பட்டிருந்தது. ஒருவர் கிரேனில் இருக்கும் ஒரு கைப்பிடியை இலேசாகச் சுழற்ற, இரும் புக் கயிறு என்னை மேலே இழுத்தது. நான் கொஞ்சம் கொஞ்ச

# ழும்

கயிறும் என் உடம்பை அறுப்பதுபோல அழுத்திக் கொண்டிருந்தது. இரும்புக் கம்பியில் இணைக்கப்பட்ட ஒரு கொக் கியை என் கழுத்துக்குப் பின் பகுதியிலும், இன்னும் ஒரு கொக்கியை என் இடுப்புப் பகுதியிலும் பொருத்தினார்கள்.

நான்காவது மாடிக்கு மேலே நிறுத்தப்



மாக பூமியிலிருந்து மேலே எழும்பிக் கொண்டிருந்தேன். பத்தடி உயரத்தி லிருந்து கீழே நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த போது மக்களைப் பார்க்க வித்தியாசமாக இருந்தது. அவர்கள் என்னைப் பார்த்துக் கையசைக்க, நானும் பதிலுக்குக் கையசைத்தேன். ஜாலியாகத் தான் இருந்தது.

கிரேன் என்னை இன்னும் மேலே இழுத்தது. கீழே பார்த்தபோது இலேசாக மண்டை கிறுகிறுப்பது போல இருந்தது. என்னை ஒருநிலைப் படுத்திக் கொண் டேன். கிரேன் என்னை இன்னும் மேலே இழுத்துக்கொண்டு போனது. ஒரு கட் டத்தில், வானத்தில் இருந்து கீழே விழுவது போல கைகளையும் கால்களையும் அப்படியும் இப்படியுமாக அசைக்கும்படி உதவி இயக்குநர் கூறினார். வானத்தில் பறவை சிறகு களை அசைப்பதுபோல என் கை, கால்களை நான் அசைத்தேன். கீழே இருந்து ஒளிப்பதிவாளர் படம் பிடித்துக் கொண் டிருந்தார். அடி வயிற்றில் இலேசான பயம் கவ்விக் கொண்டது. கிரேன் என்னை மேலும் மேலும் உயரே இழுத்துக் கொண்டே சென்றது.



இன்னும் கொஞ்ச உயரம் சென்றதும், என்ன செய்தார்களோ எனக்குத் தெரியவில்லை... என் தலைப் பகுதி அப்படியே இருக்க, என் கால் பகுதி மட்டும் உயர ஆரம்பித் தது. மறுபடியும் கை, கால்களை ஆட்டச் சொன்னார்கள். அப்படிச் செய்தபோது, என் உடம்பே எனக்குப் பாரமாகத் தெரிந்தது. 'இந்த இரும்புக் கம்பி மாத்திரம் திடீரென்று அறுந்து போனால், நம் கதி என்ன ஆகும்?' என்ற பகீர் எண்ணம் எனக்குள் இலேசாக எட்டிப் பார்த்தது. என் உடம்பு வியர்த்தது. வாய் உலர்ந்துவிட் டது. என் மனத்தில் ஏற்பட்ட பயம் ஒரு பந்து போலாகி, வாய்க்குள் வந்து முட்டு வதுபோல இருந்தது. பயந்து அலறும்படிச் சொன்னார்கள். முதலில் நான் நடிப் புக்காக அலற ஆரம்பித்தாலும், சில வினாடிகளில் நான் நிஜமாகவே அலறி னேன். (இரவு தூங்கும்போதுகூட கனவில் வந்து என்னைப் பயமுறுத்தியது மொட்டை மாடியிலிருந்து விழுகிற அந்தக் காட்சி).

பூமியின் ஈர்ப்பு விசைக்கும் கிரே னின் விசைக்கும் இடையில் சில நிமி டங்கள் திண்டாடிப் போனேன். உடம் பில் கட்டப்பட்டிருந்த இரும்புக் கம்பிகள் உடம்பை அறுப்பதைப்போல இறுக்கின. கீழே இருந்து மேலே இழுத்து, அதைப் படம் பிடித்துக்கொண்டு, மேலேயும், கீழேயுமான க்ளோஸ் அப் காட்சிகளை எடுத்துக்கொண்டு, ஒரு வழியாக அந்தக் காட்சி முடிக்கப்பட்டது. அவற்றை வைத்தே டைரக்டர், மொட்டை மாடியி லிருந்து கீழே விழுந்து தற்கொலை செய்து கொள்ளும் காட்சியினை, நிஜம் போலத் திரையில் காட்டி விடுவார். இசை அமைப்பாளரும் அதற் கேற்ப பின்னணி இசை போட்டுப் பின்னி விடுவார்.

இந்தக் காட்சியில் நான் மொட்டை மாடியி லிருந்து நிஜமாகக் கீழே குதிக்கவில்லை. குதிக்கவும் மாட்டேன். ஆனால் அப்படி ஒரு தோற்றத்தை ஏற்படுத்தும்படியான காட்சியில் நடிப்பதற்கே நான் இத்தனை சிரமப் பட வேண்டி இருந்தது. சினிமா உலகம் என்பது, பலர் நினைத்துக் கொண்டிருப்பது போல சந்தோஷங்கள் மட்டுமே கொண்ட ஓர் உலகமில்லை.

அன்று ஷூட்டிங் முடிந்த பிறகு, ரசிகர் கள் என்னைக் கைகுலுக்கி, ஆட்டோகிராப் கேட்டார்கள். ஒரு ரசிகர் என்னைப் பார்த்து, 'உங்க அப்பா ஒரு புரொடியூசர் என்பதால்தான் நீங்கள் நடிக்க வந்தீர் களா?' என்று கேட்டார். இந்தக் கேள்வி உங்களில் பலரது மனத்தில்கூட எழக் கூடும். சத்தியமாகச் சொல்கிறேன் - நான் ஒரு நடிகனாக, கேமரா முன்னால் நடிக்க வருவேன் என்று கனவிலும் நினைத்துப் பார்த்தது இல்லை.

(பேசலாம்)

சந்திப்பு : மௌலி

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்

தொலைபேசி எண் 25511786 மொபைல் : 9444035876

எமது புதிய விலாசம்: 2A, II Floor Mathura Enclave - New No 123,
Perambur High Road, Perambur, Chennai - 11

(நாம சங்கீர்த்தனத்துடன் அன்பர்களை அழைத்துச் செல்லும் ஆன்மிகச் சுற்றுலாக் குழு அமைப்பாளர்கள்)

1. 20.01.07 முதல் 25.01.07 வரை அஹோபிலம், மந்த்ராலயம், ஸ்ரீசைலம், நெல்லூர். 2 X 2 டீலக்ஸ் பஸ் (35 இருக்கைகள்) பஸ், சாப்பாடு, இரவு தங்குதல் உட்பட நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ.1850/-
2. 08.02.07 முதல் 13.02.07 வரை சோழநாடு திவ்ய தேசங்கள் (40 வைஷ்ணவ கோவில்கள் மட்டுமே) யாத்திரை டீலக்ஸ் பஸ் 2 X 2 மூலமாக - பஸ், சாப்பாடு, இரவு, பொதுவாக தங்கும் இடம் உட்பட நபர் ஒருவருக்கு கட்டணம் ரூ. 2600/-
3. 21.02.07 முதல் 01.03.07 வரை கர்நாடக மாநில யாத்திரை மேல்கோட்டை ஸ்ரீரங்கப்பட்டிணம், தலைக்காவேரி, தர்மஸ்தலா, சுப்ரமண்யா, உடுப்பி, மூகாம்பிகை, சிருங்கேரி, முருடேஸ்வரர், கோகர்ணம், கலசா அன்னபூர்ணா பேலூர், ஹளபேடு ஆகிய திருத்தலங்கள் சென்னை - பெங்களூர் - சென்னை இரயில் பயணம். இதர இடங்கட்கு 2 X 2 டீலக்ஸ் பஸ் மூலமாக பயணம். கட்டணம் ரூ. 3650
4. 07.03.07 முதல் 13.03.07. வரை ஆந்திர மாநில யாத்திரை பஞ்ச ஆராம க்ஷேத்திரங்கள் (சிவஸ்தலம்) மற்றும் விஜயவாடா, கனகதுர்கா, பத்ராசலம், அன்னவரம், சிம்ஹாசலம் ஆகிய திருத்தலங்கள். சென்னை - விஜயவாடா - சென்னை இரயில் பயணம். இதர இடங்களுக்கு 2 X 2 டீலக்ஸ் பஸ் மூலமாக பயணம். கட்டணம் ரூ. 2850/-
5. 19.03.07 முதல் 30.03.07 வரை 12 நாட்கள் கொண்ட காசி, கயா, அயோத்தியா, அலகாபாத், நைமிசாரண்யம் இரயில், பஸ், சாப்பாடு உட்பட கட்டணம் ரூ. 5250/- மேற்படி இடங்களில் சிரார்த்த வைதீக காரியங்கள் தகுந்த புரோகிதர்களை வைத்து நடத்தி கொடுக்கப்படும்.
6. 05.04.07 முதல் 09.04.07 வரை முக்திநாத்/சாளக்கிராம யாத்திரை சென்னை - டெல்லி - காட்மாண்டு- டெல்லி - சென்னை விமானம் மூலமாகவும், சாளக்கிராம யாத்திரை ஹெலிகாப்டர் மூலமாகவும் பயணம். கட்டணம் ரூ. 36500/-



மேற்படி யாத்திரையின் கட்டணம் மற்றும் விவரம் அறிய சுய விலாசமிட்ட
ரூ. 5/- ஸ்டாம்ப் கவருடன் விண்ணப்பிக்கவும்.

மாருதி யாத்திரை பக்தியுடன் பகவத் அனுகிரஹத்தைப் பெறுவதற்கே-
மிகுந்த சௌகர்யத்திற்கும், வாதிக்கும் அல்ல.

பங்கு பெறுவீர்!
பாக்கியவான்களாவீர்!

Visit our Website: www.srimaruthitravels.com

V.சீனிவாசன்
(அமைப்பாளர்)

---

# சரோஜா வைத்யநாத ஐயர்
# பரம்பரை ஜோதிடர்

ஜோதிடத்தில் 50 வருட அனுபவம் கொண்ட
"ஜோதிட வாணி"

**ஸ்ரீமதி சரோஜா வைத்யநாத ஸ்வாமி ஐயர்**

கைரேகை, ஜாதகம், நியூமராலஜி, வாஸ்து,
சாமுத்ரிகா லக்ஷணம், திருமணப் பொருத்தம்,
அனைத்தும் பார்க்கப்படும்.

அனைத்து ஆலோசனைகளும் வழங்கப்படும்.

V.சரோஜா, 45/18, ஸ்ரீநிவாச ஐயர் தெரு, மேற்கு மாம்பலம்,
அயோத்யா மண்டபம் அருகில்,
பிள்ளையார்கோவில் அருகில் உள்ள தெரு.
Ph: 23716892, Cell: 9444230523, 9444684006





# மோதிரம் போட்ட வைரமுத்து!

படைப்பாளியின் கற்பனை...
ஓவியனின் கற்பனை...
வாசகனின் கற்பனை...

இந்த மூன்றும் ஒருங்கிணையும் போதுதான் ஓர் ஓவியனின் படைப்பு வெற்றிகரமாக அமைகிறது. அந்த வகையில் கள்ளிக்காட்டு இதிகாசத்தைத் தொடர்ந்து, கருவாச்சி காவியத்தின் ஓவியங்களும் பேசப் படுவதற்காக மகிழ்கிறேன்" என்று நெகிழ்கிறார் ஓவியர் மணியம் செல்வம்.

"என் விருப்பத்தை அறிந்து கருவாச்சி கதை நிகழ்ந்த அந்தக் கிராமங்களுக்கு என்னை அழைத்துச் சென்று, எனது படைப்பின் நேர்த்தியை உயர்த்திய கவிஞருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரே நேரத்தில் மூன்று தொடர்களுக்கு வரைந்த போதும்; மூன்று வெவ்வேறு மனநிலைகளில் ஓவியம் வரைந்தது சவாலாகவும், சந்தோஷமாகவும் அமைந்தது" என்று நெக்குருகும் ஓவியரைப் பற்றி வைரமுத்து என்ன சொல்கிறார்?

"இதுவரை ஓவிய எல்லைக்குள் சிக்காத காட்சிகளைக்கூட இந்நூலுக்காக ம.செ. வரைந்துள்ளார். குக்கிராமத்தில் பிறந்து வளர்ந்திராவிடினும், கதைக் களத்துக்கு என்னுடன் வந்து மனிதர்களை உள்வாங்கி உருவம் தந்துள்ளார் அவர். நான் ஓவியனாக இருந்தால் எப்படி வரைந்திருப்பேனோ அதைப் போன்றே வரைந்துள்ள மசெவின் விரல்களுக்கு மனமார்ந்த என் நன்றிகள்!'' என்று சொன்னதோடு நில்லாமல், 'கருவாச்சி காவியம்' நூல் வெளியீட்டு விழா மேடையில் மணியம் செல்வத்தின் விரலுக்கு மோதிரம் அணிவித்து மரியாதையும் செய்திருக்கிறார் வைரமுத்து.

- அருணா. செந்தில்குமரன்

படம் : ஸ்ரீஹரி





“நெல் என்பது ஒருவகைச் செடியில் காய்க்கும் தானிய மாகும். அது மரத்தில் காய்கும் ஒரு வகைப் பழம் என்பதாக சில விவசாய நிபுணர்கள் சொல்கின்றார்கள். இது முற்றிலும் தவறான கொள்கையென்பது இந்தியாவில் பிறந்த குஞ்சுக் குழந்தை எல்லாருக்கும் தெரியும். நெல் உண்டாவது செடியிலேயேயன்றி மரத்தில் அல்லவே அல்ல.

“நெல் செடிக்குக் கிளைகள் இல்லை. ஆனால் இலைகள் உண்டு. பூ கிடையாது. அமெரிக்கா தேசத்தில் ஓர் அதிசயமான நெல் செடி இருப்பதாகவும் அது பூ பூப்பதாகவும் சொல்கிறார்கள்; ஆனால் இதைச் சொல்லக் கேட்டவர்களேயன்றி நேரில் பார்த்தவர்கள் யாருமில்லை.

“நெல்லானது செடியில் எந்தப் பகுதியில் காய்க்கின்றது என்பது அடுத்த கேள்வி. பல தேசங்களிலுமுள்ள பல விவசாய நிபுணர்கள் நீண்ட கால ஆராய்ச்சியின்பேரில், நெல்லானது செடியின் வேரில் காய்ப்பதில்லை என்ற ஒருமுகமான முடிவுக்கு வந்திருக்கிறார்கள். ஆகவே நாமும் இம் முடிவை ஏற்றுக் கொள்கின்றோம்.

“ஆனால், நெல்லுக்கு வேண்டிய ஆகாரம் என்னவென்பதைப் பற்றி இதுவரையில் ஒருமுகமான முடிவு ஏற்படாதது மிகவும் வருந்தத் தக்கதேயாகும். நெல்லுக்கு முக்கியமாக வேண்டியது உரம் என்பர் சிலர்; நெல்லின் பிரதான உணவு தண்ணீர்தான் என்பர் வேறு சிலர். உரமும், நீரும் அநாவசியம், வேண்டுவது சூரிய வெப்பமே என்று வற்புறுத்துவர் பின்னும் சிலர். ஆராய்ச்சியின்றி வெறும் அனுபவம் மட்டும் உள்ளவர்களோ இவை மூன்றும் வேண்டுவனவே என்று குருட்டாம் போக்காய் அடிப்பார்கள்.

“நெற்செடி பயிர் செய்வதற்குப் பல முறைகள் கையாளப்படுகின்றன. விதை தெளித்து, நாற்றுப் பிடுங்கி, உழுது பரம் படித்த வயல்களில் நடுவது ஒருமுறை. ஆனால் இது மிகவும் பழைமையான கர்நாடக முறையாகும். குழி தோண்டி விதை போட்டுச் செடி முளைத்துப் பெரிதாய் வளர்ந்ததும், வேருடன் பிடுங்கித் துண்டு துண்டாய் வெட்டிச் சட்டிகளில் வைத்துப் பயிராக்குவது மற்றொரு முறை. நெற்செடிகளை ஒட்டுப் போடும் முறைகூட இக்காலத்தில் சிலரால் கையாளப்படுகின்றதாம்.

# கொத்துக் கொத்தாய்ப்



"நெல்லுச் செடி நன்கு வளர்ந்து அதன் இலைகள் பழுப்படையும் சமயத்தில் கொத்துக் கொத்தாய்ப் பிஞ்சுவிட்டுக் காய் காய்க்கின்றது. காய் முற்றியதும் ஜனங்கள் அவற்றைப் பொறுக்கிச் சேர்ப்பார்கள். செடிகளை அடியோடு வெட்டி அவற்றைக் களத்தில் அடித்துத் தானியங்களை உதிர்த்துச் சேர்ப்பதுமுண்டு. அதற்கு அறுவடை என்று பெயர். ஒவ்வொரு நெல்லுக்குள்ளும் ஒவ்வோர் அரிசிதான் இருக்கும். சில நெல்களில் அதுகூட இராது. இவற்றுக்குப் பதர் என்று பெயர்.

"ஜனங்கள் எதற்காக நெற்செடியைப் பயிர் செய்கிறார்கள் தெரியுமா? நெல் நமக்கு உணவாகப் பயன்படுகிறது. இதைவிட வேறு நல்ல உபயோகம் எதுவும் இந்நாள் வரையில் நெல்லுக்குக் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆகையினால்தான் காருண்ய ஆங்கில துரைத்தனத்தார் நெல் சாகுபடி விஷயத்தில் அதிக கவனம் செலுத்தவில்லையென்பது பிரசித்தியான விஷயமாகும். உதாரணமாகப் பருத்தி, சணல் முதலிய பயிர்களை எடுத்துக் கொண்டால், அவை எவ்வளவு நல்ல வழிகளில் பயன்படுகின்றன! எத்தனை யெத்தனை அன்னியத் தொழிலாளிகள் பிழைக்கவும், எத்தனை யெத்தனை அன்னிய முதலாளிகள் கொழுக்கவும் உபயோகமாகின்றன! நெல்லோ, கேவலம் ஏழை இந்தியர்களின் பாழ் வயிற்றை நிரப்புவதற்கு மட்டுமே பயன்படுகிறது. ஆகையினால்தான் பிரிட்டிஷ் சர்க்கார் நெற்பயிர் அபிவிருத்தி விஷயத்தில் அவ்வளவு கவலை செலுத்துவதில்லை. அப்படியிருந்த போதிலும்கூட, இந்தியாவில் அன்னியத் துரைத்தனம் ஏற்பட்ட பின்னர், அதற்கு முன் ஒரு படி நெல் காய்த்துக் கொண்டிருந்த நெற்செடிகள் இரண்டு படி காய்த்துத் தருகின்றன என்பது வெகு ஜனவாக்கு. இதற்கு முக்கிய காரணம் மேற்படி செடிகளுக்கு அதிகார வர்க்கத்தாரிடம் உள்ள 'காபரா'வே என்று சொல்லப் படுகின்றது!

- 'அதிர்ஷ்ட கவசம்'
வானதி வெளியீடு

# பிஞ்சுவிட்டு...





















உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? 1908ஆம் ஆண்டில் கோல்கேட் நிறுவனம் பற்பசையை முதன் முதலாக அறிமுகப்படுத்தியபோது, பற்பசையை நம் ஊரில், ஊறுகாய் விற்பதைப் போல ஜாடியில்தான் விற்றார்கள். இன்று கோல்கேட் நிறுவனம் கோல்கேட்-பாமாலிவ் என்ற பெயரில் இரட்டை சென்சுரி போட்டுப் புகழ் பெற்ற பன்னாட்டு நிறுவனமாக விளங்குகிறது. முப்பத்தாறாயிரம் தொழிலாளர்கள் பணிபுரிகிறார்கள். கம்பெனியின் ஆண்டு வருமானம் 1.35 பில்லியன் அமெரிக்க டாலர்கள்.









1806ஆம் ஆண்டில் ஹென்ரி வில்லியம், கோல்கேட் என்பவர் நியூயார்க் நகரில் வில்லியம் கோல்கேட் அண்டு கம்பெனி என்ற பெயரில் ஒரு தொழிற்சாலையை ஆரம்பித்துத் துணிகள் வெளுக்கப் பயன்படுத்தப்படும் ஸ்டார்ஸ் பவுடர், சோப்பு மற்றும் மெழுகு வர்த்தி ஆகியவற்றைத் தயாரித்தார். 1957ல், வில்லியம் கோல்கேட் மரணமடைய, அவரது மகன் சாமுவேல் கோல்கேட் கம்பெனியின் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டார். கம்பெனியின் பெயரும் கோல்கேட் அண்டு கம்பெனி என்று மாறியது.

இதற்கிடையில், பி.ஜே. ஜான்சன் கம்பெனி என்ற நிறுவனம் பாமாயில், ஆலிவ் எண்ணெய் இரண்டை மட்டுமே பயன்படுத்தி ஒரு சோப்பினைத் தயாரித்தது. அதற்கு மக்கள் மத்தியில் மகத்தான வரவேற்பு கிடைத்தது. அதன் காரணமாகவே, அந்தக் கம்பெனியின் பெயர் பாமாலிவ் கம்பெனி என்று மாறியது. கென்சாஸ் மாகாணத்தில இன்னொரு சோப்புத் தொழிற்சாலையின் பெயர் பீட் பிரதர்ஸ். பாமாலிவ், பீட் பிரதர்ஸ் ஆகிய இரண்டு நிறுவனங்களும் இணைந்து பாமாலிவ்-பீட் நிறுவனம் ஆனது. அக்கம்பெனி 1928-ல் கோல்கேட்டுடன் இணைய, புதிய நிறுவனம் கோல்கேட்-பாமாலிவ்-பீட் கம்பெனி என்று அழைக்கப்பட்டது. சில ஆண்டுகளில் அந்தப் பெயர் கோல்கேட்-பாமாலிவ் என்று சுருங்கிவிட்டது.

டெலிவிஷன் அறிமுகமான காலகட்டத்தில், கோல்கேட் தனது போட்டியாளரான ப்ராக்டர் அண்டு கேம்பிளைச் சமாளிக்க நிறைய, டெலிவிஷன் தொடர்களை ஸ்பான்சர் செய்தது. அவற்றுள் 'டாக்டர்ஸ்' என்ற தொடர் அமெரிக்காவில் மிகவும் புகழ் பெற்ற தொடராகும்.

பற்பசை மற்றும் பல் துலக்கும் பிரஷை மக்கள் மத்தியில் பெரிய அளவில் அறிமுகப்படுத்தத் திட்டமிட்டது கோல்கேட். பெரியவர்களை விட குழந்தைகளே தனது

# கோலோச்சும் கோல்கேட்!

வாடிக்கையாளர்கள் என்று தீர்மானித்தது. பள்ளிக் குழந்தைகள் மத்தியில் பற்களையும், வாயையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் செயல்முறை விளக்கத்தையும் சுகாதாரப் பணியாளர்கள் மூலம் அளித்தது. மேலும் குழந்தைகளுக்கு இலவசமாகவே பேஸ்ட், பிரஷ் இரண்டையும் வினியோகம் செய்தது கோல்கேட்.

1914ஆம் ஆண்டில், கோல்கேட் கனடா நாட்டில் கால் பதித்தது. அடுத்த ஆறு வருடங்களில் ஐரோப்பிய நாடுகளுக்கும், ஆசிய, ஆப்ரிக்க நாடுகளுக்கும் அது விரிவடைந்தது. 1930ஆம் ஆண்டு, கோல்கேட் நிறுவனத்தின் பங்குகள், நியூயார்க் பங்குச் சந்தையின் பங்குகள் பட்டியலில் இடம் பெற்றது. வெறும் பற்பசை வகைகளுடன் நின்றுவிடாமல், சோப்பு வகைகள், வீட்டு அழுக்கு நீக்கி வகைகள், செல்லப் பிராணிகளுக்குச் சத்துணவு என்று மொத்தம் நான்கு பிரிவுகளில் நூற்றுக்கணக்கான பொருட்களைத் தயாரிக்கிறது. கோல்கேட் தயாரிப்புகள் உலகின் 222 நாடுகளில் விற்பனையாகின்றன.



கோல்கேட் இன்று உலகறிந்த ஒரு பெயராக இருப்பதற்கு என்ன காரணம்? உலக மக்கள் அனைவருக்கும் பற்கள் பராமரிப்பு பற்றிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக ஆண்டுதோறும் உலகமெங்கும் உள்ள ஐந்து கோடி பள்ளிக் குழந்தைகளுக்கு இலவச பேஸ்ட், பிரஷ் வழங்கும் திட்டத்தை அவர்கள் செயல்படுத்தி வருகிறார்கள்!

"முழுமையான பற்கள் பராமரிப்புக்கு" என்ற அடைமொழியுடன் 'கோல்கேட் - டோட்டல்' பற்பசை அறிமுகப்படுத்தப்பட்டபோது, அமெரிக்காவில் ஆயிரக்கணக்கான பல் டாக்டர்கள் டோட்டலை சிபாரிசு செய்யத் தொடங்கினார்கள்.

மக்களின் பொருளாதார நிலையை அறிந்து, அவர்களால் எளிதில் ஏற்றுக் கொள்ளக்கூடிய வடிவமாக கோல்கேட் பல்பொடி தயாரித்து விற்பனை செய்யப்படுகிறது. சீனாவில் சாக்பீஸ் மணத்துடன் கூடிய பசை, பல் துலக்கிய பிறகு வாய் மணக்க வைக்கும் ஜெல் ரக பற்பசை போன்றவற்றைத் தயாரித்து விற்கிறது கோல்கேட். கிராமப்புறங்களில் ஏராளமான பல் பாதுகாப்பு முகாம்களையும் நடமாடும் டென்டல் கிளினிக்குகளையும் நடத்தி மக்கள் மத்தியில் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியும் வருகிறது.

(நிறைந்தது)

எஸ். சந்திரமௌலி





# ஐம்பதிலும் வளையும்!

இத்தனை நாள் ஏதாவொரு தினுசிலேயே வாழ்க்கை நடத்தி விட்டோம். இப்போது திடீரென்று ஏதாவது சாஸ்திரத்தை, கலையைக் கற்பது என்றால் எப்படி முடியும்? அதற்கு ஒரு வயது இல்லையா? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா என்று கேட்கலாம். அதற்கான வயதில்தான் அதுவும் சுலபமாக வரும் என்பதும், கலையார்வத்துக்கும் ஏற்ற ஒரு பருவம் உண்டு என்பதும் வாஸ்தவந்தான். ஆனாலும் 'இந்தத் தேசத்திலேயே பிறந்துவிட்டு இதன் ஏராளமான சாஸ்திரங்களில் ஒன்றுகூடத் தெரியாமலிருக்கிறோமே!' என்ற உணர்வு இருந்தால் எந்த வயதிலும் வித்தை வரும். ஆர்வமே இளவயதின் துடிப்பையும், கல்வியைக் கிரகித்துக் கொள்ளும் சக்தியையும் உண்டாக்கி விடும்.

இதுவரை ஏதோவொரு வாழ்க்கை முறையில் போய் விட்டோமென்றால் அது நியாயமாக நாம் போயிருக்கப் படாத 'ஏதோவொரு' முறைதான். அதனால் 'எந்த ஒரு முறை'யில்தான் நாம் போயிருக்க வேண்டுமோ அதிலே இனியாவது போவது என்று உறுதியும் ஆர்வமும் இருந்தால் சுலபமாக அப்படி மாற்றிக் கொள்ளலாம்.



ஐம்பதில் வளையுமா என்று கேட்பதையே 'சாலஞ்ஜா'க எடுத்துக் கொண்டு, 'ஓ! வளையும்' என்று காட்ட முயல வேண்டும். உரிய வயதிலே ஒன்றைக் கோட்டை விட்டவர்கள் இப்படி 'சாலஞ்ஜ்' பண்ணி ஜயித்துக் காட்டவேதான் அந்தப் பழமொழி ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்க வேண்டும். இவ் வுலகத்தில் இப்படிப் பலர் சவால் விட்டு வெற்றியடைந்திருக்கிறார்கள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்

நிர்வாக அலுவலகம் : 16, இரண்டாவது மெயின் ரோடு, கோட்டூர்புரம், சென்னை - 600 085.
போன்: 24471936 / 2447 2540
**E.Mail : prb@vsnl.com Website : http://personal.vsnl.com/kmaw_trust**

## வேண்டுகோள்



- ஸ்ரீ காஞ்சி மாமுனிவரின் ஆக்ஞைப்படி அவர் அருளுடன் இந்த டிரஸ்ட் 1986ல் ஸ்தாபிக்கப்பட்டது.
- **தமிழ் நாட்டில் உள்ள பழைமையான கிராமக் கோவில்களில் பூஜை செய்யும் மிக ஏழ்மை நிலையில் உள்ள பூசாரிகள் உள்ளிட்ட அர்ச்சகர்களுக்கு ஒவ்வொரு மாதமும் உதவிப்பணம் அளிக்கப்படுகிறது.**
- ஸ்ரீ மஹா பெரியவாளின் மேலான அருளுரைப் படி இந்த நற்பணிக்கு நன்கொடை அளிக்குமாறு ஆஸ்திக அன்பர்களை வேண்டிக் கொள்கிறோம். ரூ.4,000/-க்கு மேல் மாத மொத்த வருமானம் பெறுபவர்கள் தங்களது ஒரு மாத மொத்த வருமானத்தை *தங்கள் வாழ்நாளில் அவர்களுடைய சௌகர்யப்படி*, மொத்தமாகவோ அல்லது பல தவணைகளிலோ நன்கொடையாக கொடுத்து உதவுதல் நலம் என ஸ்ரீ மஹா சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார்கள். அவரவர்கள் தங்களால் இயன்றளவு அளிக்கும் நன்கொடையை நன்றியுடன் பெற்றுக் கொள்வோம்.
- நன்கொடைகளை க்ராஸ் செய்த காசோலை அல்லது டிமாண்ட் டிராப்டாக ***"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"*** என்ற பெயரில் சென்னையில் ஏதாவதொரு வங்கிக் கிளையில் பெறுமாறு நிர்வாக அலுவலகத்திற்கு அனுப்பவும்.
- தற்சமயம் இந்த டிரஸ்ட் கிராமங்களிலுள்ள 309 ஏழை அர்ச்சகர்களுக்கு மாத உதவித் தொகையாக ரூ. 550/-ஐ வழங்கி வருகிறது.
- **ஒவ்வொரு ஆண்டும் மாத உதவி கோரும் ஏழை அர்ச்சகர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதாலும், முதலீடுகளின் பேரில் வரும் வட்டி விகிதம் வேகமாக குறைந்து வருவதாலும், டிரஸ்டின் மூலதனத்தை உடனடியாக அதிகரிக்க வேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டுள்ளது. ஆகையால் ஸ்ரீ காஞ்சி மகானின் அருளாக்ஞையின்படி தங்களுடைய நன்கொடைகளை விரைவில் அனுப்பி உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம்.**

**C.V. Narasimhan, I.P.S., (Retd)**
பொறுப்புக் குழுவின் தலைவர்.



பின் குறிப்பு:

நன்கொடைகளுக்கு வருமானவரி சட்டப்பிரிவு 80 G-யின் கீழ் வரிவிலக்குண்டு. வெளிநாட்டு நன்கொடைகளை ஏற்க FCRA-ன் கீழ் (எண்: 075820173) பதிவு செய்யப்பட்டுள்ளது.





# நடக்குமென்பார்; நடக்கும்!

## பாலாஜி பதில்கள்

**மேஷம்:** அதிர்ஷ்டமான வாரம். மனக் குழப்பம் விலகும். நிதி நிலைமை சீராகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். புத்திரபாக்கியம் உண்டாகும். உடல் ஆரோக்கியம் சீராகும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். வீடு/மனை வாங்க ஏற்ற தருணம். புதிய முயற்சியில் அனுகூலம் உண்டாகும். தடை விலகித் திருமணம் கைகூடும். குரு/ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**ரிஷபம்:** யோகமான வாரம். வாக்கு, வன்மை மேலோங்கும். திருமணம் கைகூடும். வீடு/மனை வாங்க நல்ல காலம். குழந்தை பாக்கியம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல வளர்ச்சி உண்டாகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேது வழிபாடு சாலச் சிறந்தது.

**மிதுனம்:** மகிழ்ச்சியான வாரம். மனத்தில் நிம்மதி ஏற்படும். கல்வியில் முன்னேற்றம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். நீண்டகால பிரயாண வாய்ப்பு வந்து சேரும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். தடை விலகித் திருமணம் நடக்கும். குரு/சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

**கடகம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். திருமண ஏற்பாடுகள் வெற்றி அளிக்கும். மறைமுக எதிர்ப்பு இருக்கும். உடல்நிலையில் கவனம் தேவை. குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சிகள் கைகூடும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பூமி வாங்கும் யோகம் வரும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** மனக்குழப்பம் விலகும் வாரம். தடை விலகித் திருமணம் கைகூடும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். தொழில்துறையில் ஆதாயம் கிட்டும். உத்தியோகத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். நீண்டகாலக் கடன் தொல்லை விலகும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. கல்வி வளம் மேலோங்கும். நண்பர் உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.

**கன்னி:** மேன்மையான வாரம். தன யோகம் ஏற்படும். சுப நிகழ்ச்சிகள் கைகூடும். எதிலும் வெற்றிவாகை சூடும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் கிட்டும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்படும். நண்பர் உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**துலாம்:** செல்வாக்கு மிகுந்த வாரம். மனத்தில் தைரியம், தன்னம்பிக்கையும் மிகுந்து காணப்படும். திருமணக் காரியம் கைகூடும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும்.

உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். பணக்கஷ்டம் இருக்காது. ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:** சந்தோஷமான வாரம். சுபநிகழ்ச்சி கைகூடும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். சொத்துகள் வாங்க நல்ல காலம். சத்ரு தொல்லை விலகும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். ராகு/கேது/குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**தனுசு:** தெய்வபலம், ஆத்மபலம் நிறைந்த வாரம். பணக்கஷ்டம் விலகும். சுபநிகழ்ச்சிகள் கைகூடும். வராத பணமும் கைக்கு வந்து சேரும். தொழில் துவங்க நல்ல நேரம். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். சனி/குரு வழிபாடு செய்து வருதல் நற்பலனை அளிக்கும்.

**மகரம்:** சொத்துகள் வாங்க நல்ல தருணம். படிப்பில் அக்கறையுடன் படிக்கவும். தொழில்துறையில் சற்று மந்தநிலை இருக்கும். உத்தியோகத்தில் வேலை பளு அதிகரிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வருதல் நற்பலனைத் தரும்.




**தஞ்சை பரத்வாஜ்**

**கும்பம்:** சிறப்பான வாரம். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். புதிய தொழில் முயற்சி கைகூடும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். வீடு/மனை வாங்க நல்ல தருணம். உத்தியோகத்தில் இடமாற்றம் உண்டாகும். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். கல்வி வளம் மேலோங்கும். ராகு/கேது/குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். வீடு/மனை வாங்க நல்ல தருணம். மகப்பேறு கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். குழந்தைகளால் மகிழ்ச்சி கிட்டும். நீண்டநாள் காரியம் கைகூடும். வேலையில் நற்பெயர் உண்டாகும். வராத பணமும் வந்துசேரும். புதிய தொழில் கைகூடும். ஆஞ்சநேயர் வழிபாடு நற்பலனைத் தரும்.

என் பேத்திகளின் ஜாதகப்படி அவர்களுக்குத் திருமண வாழ்க்கை எப்படி அமையும்?

**- எஸ். ஜெயலட்சுமி, சென்னை-83**

உங்கள் பேத்திக்கு 2007ல் திருமணம் நடக்கும். சர்ப்ப தோஷம் உள்ள ஜாதகமாகச் சேர்க்கவும். வெளிநாட்டு வரன் அமையும். மேல்நாடு சென்று படிக்கும் வாய்ப்பு உள்ளது. அடுத்த பேத்திக்கு 25 வயது முடிந்து 26-ல் திருமணம் நடக்கும்.

என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? கடந்த பத்து ஆண்டுகளாக மிகவும் சிரமப்படுகிறான். பரிகாரம் தேவையா?

**- பி.கே. சரஸ்வதி, அசோக்நகர்**

தங்கள் பையன் ஜாதகப்படி 30வயது வரை ராகு தசை நடக்கும். ராகு தசையில் எதிலும் போராடித்தான் வெற்றியைப் பெற முடியும். திருநாகேஸ்வரம் சென்று சர்ப்பதோஷம் பரிகாரம் செய்துவர, சிரமமின்றி பரிகாரம் கிடைக்கும்.





## சுஜாதா

# எல்லாம் நானே என்கிறார்!

பகவத் கீதையில் பத்தாம் அத்தியாயத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனுக்குத் தான் யார் என்று நேரடியாக விளக்கிச் சொல்லும் பிரமிப்பூட்டும் சுலோகங்கள் உள்ளன. பகவத் கீதையை உலகின் தலைசிறந்த நூல்களில் ஒன்றாகச் சொல்வதற்கு முக்கியக் காரணம் இந்தப் பத்தாம் அத்தியாயம். இதன் கருத்துகளை நம்மாழ்வார் அப்படியே கிரகித்துக்கொண்டு அவற்றை ஒருதாய் தன் பெண் என்னென்னவோ பிதற்றுகிறாளே என்று கவலைப்படுவதாக அமைத்த பாசுரங்களாக மாற்றி கீதையின் ஆழ்ந்த கருத்துகளை - குறிப்பாக, பத்தாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்ட அத்தனைக் கருத்துகளையும் எளிமையாகச் சொல்லிவிடுகிறார்.

"கடல் ஞாலம் செய்தேனும் யானே
என்னும்
கடல் ஞாலம் ஆவேனும் யானே
என்னும்
கடல் ஞாலம் கொண்டேனும் யானே
என்னும்
கடல் ஞாலம் கீண்டேனும் யானே
என்னும்
கடல் ஞாலம் உண்டேனும் யானே
என்னும்
கடல் ஞாலம் ஈசன் வந்து
ஏறக்கொலோ?
கடல் ஞாலத்தீர்க்கு இவை என்
சொல்லுகேன்.
கடல் ஞாலத்து என் மகள்
கற்கின்றவே?"

(கடல் ஞாலம் - கடல் சூழ்ந்த உலகம், கீண்டேன் - பிளந்தேன், கற்கின்றவே - சொல்வதெல்லாம்)

'நீரையும் நிலத்தையும் செய்ததும் நானே என்கிறாள். அது ஆவதும் நான், அதைக் கொண்டதும் நான், அதைப் பிளந்ததும் நான் உண்டதும் நான் என்கிறாள். திருமால் வந்து புகுந்ததாலோ என்னவோ உலகத்தவர்களே, என் மகள் இப்படிப் பேசுகிறாள்.'

இந்தப் பாடலையும் கீதையின் பத்தாவது அத்தியாயத்தின் 32ஆவது சுலோகத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

ஸர்காணாம் ஆதிர் அந்தஸ்ச மத்யம் சைவாஹம் அர்ஜுன
அத்யாத்ம வித்யாவித்யானாம் வாதஹ ப்ரவத்தாம் அஹம்

'அர்ஜுனா யானே சிருஷ்டி, அனைத்தையும் படைத்தவன், காத்தவன், அழித்தவன், அடிப்படை ஞானமும் தர்க்கமும் முடிவுகளும் யானே.'

திவ்யப் பிரபந்தத்தில் கீதோபதேசத்தைப் பற்றி நேரடியான குறிப்புகள் எதுவும் இல்லைதான். ஆனால் கீதையைப் படித்திராமல் நம்மாழ்வாரால் இந்த வரிகளை எழுதியிருக்க முடியாது.

(படிக்கலாம்)



Estd. 1989

ஸ்ரீசுந்தர விநாயகர் துணை உ தேவதானப்பட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை



# சன் டிராவல்ஸ்

தினசரி காலை காபி, 3 வேளை பிராமணாள் உணவு, தங்கும் வசதியுடன்
3 Tier இரயில் சுற்றுலாக்கள் சென்னையில் இருந்து புறப்படுகின்றது

12-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 23-03-07 & 15-04-07
06-05-07 & 21-05-07 & 20-06-07 முதல் 10 நாட்கள் : ரூ. 4500
டெல்லி–திரிவேணி–காசி–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க்

09-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 20-03-07 & 12-04-07
03-05-07 & 18-05-07 & 17-06-07 முதல் 13 நாட்கள் : ரூ. 5990
மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–திரிவேணி–காசி–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க்

06-02-07 (மகா சிவராத்திரி சுற்றுலா) & 17-03-07 & 09-04-07
30-04-07 & 15-05-07 & 14-06-07 முதல் 18 நாட்கள் : ரூ. 7990
பண்டரிபுரம்-மும்பை-உஜ்ஜைனி (மகா காளேஸ்வரர் ஜோதிர் லிங்கம்)–ஜெய்பூர்–மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–திரிவேணி–காசி–வியாசகாசி–சாரணாத்–கயா–புத்தகயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க்

09-05-07 & 18-05-07 & 17-06-07 & 19-07-07 & 18-08-07
& 11-09-07 & 28-10-07 (தீபாவளி சுற்றுலா) முதல் 13 நாட்கள் : ரூ. 5990
மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–பத்ரிநாத்–கேதார்நாத்
★ இத்துடன் திரிவேணி–காசி–கயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உட்பட 18 நாட்கள் ரூ. 7990

09-02-07 & 20-03-07 & 12-04-07 & 03-05-07 & 18-05-07
& 17-06-07 முதல் 12 நாட்கள் : மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி ரூ. 6490
குருக்ஷேத்திரம்–சண்டிகார்–சிம்லா–குப்ரி–மணிக்கரன்–குலு–மணாலி–ரோத்தங்பாஸ்–வசிஷ்டாபாத்
★ இத்துடன் அமிர்தசரஸ்–வாகாபார்டர்–ஜம்மு–வைஷ்ணவதேவி உட்பட 15 நாட்கள் ரூ. 7590

20-03-07 & 15-04-07 & 06-05-07 & 18-05-07 & 17-06-07
19-07-07 & 18-08-07 & 11-09-07 முதல் 12 நாட்கள் : ரூ. 6490
பூரி–புவனேஸ்வர்–கோனார்க்–கல்கத்தா–சயன்ஸ்சிட்டி–டார்ஜிலிங்–கேங்டாக் (சிக்கிம்) சங்குலேக்–பாபாமந்திர்–மந்தாகினி வாட்டர் பால்ஸ்

12-04-07 & 09-05-07 & 19-07-07 முதல் 15 நாட்கள் : ரூ. 6990
போபால்–சாஞ்சி–ஜான்சி–கஜூராஹோ–குவாலியர்–ஆக்ரா–மதுரா–சிக்கந்த்ரா–நைமிசாரண்யம்–அயோத்தி–நாசிக்–திரியம்பகம்–அஜந்தா–எல்லோரா–குஷ்னேஷ்வரம்–மும்பை

09-02-07 & 09-03-07 முதல் அழகிய அந்தமான் தீவுகள் சுற்றுலா
ரோஸ் தீவு–வைப்பர் தீவு–கார்பின் கேவ் கடற்கரை–சாந்தோம் மர அறுவை மில்–மிருக காட்சி சாலை–செல்லுலார்ஜெயில்–ஜாலி பாய் தீவு–ரெட்ஸ்கின் தீவு–மியூசியம்
★ சென்னையிலிருந்து அந்தமான் போக வர A/c பங்க் கிளாஸ் கப்பல் பயணம் உணவு தங்கும் வசதி உள்பட 10 நாட்கள் ரூ. 6990
★ மேற்கண்ட வசதியுடன் கப்பல், திரும்பிவர விமானம் மூலம் 8 நாட்கள் கட்டணம் ரூ. 11990
★ மேற்கண்ட வசதியுடன் விமானம் மூலம் போக, வர 6 நாட்கள் கட்டணம் ரூ. 14990

அமர்நாத், அந்தமான், மூணாறு, நேப்பாள், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா சுற்றுலாக்களுக்கு அணுகவும்

* L.T.C. ரசீது தரப்படும். | II Tier A/c & III Tier A/c சுற்றுலா உண்டு

## சன் டிராவல்ஸ்


Prop. K. சிதம்பரம், B.Sc., B.Ed.,
செல் : 98421 - 56668

மதுரை : 3, தெற்கு மாசி வீதி, T.M. கோர்ட் (நரசுஸ் காபி எதிரில்) மதுரை – 1. போன் : 2341133
சென்னை : 30, நடேசன் தெரு, (சிவா–விஷ்ணு ஆலயம் அருகில்) T. நகர், சென்னை–17. போன் : 24359194, செல் : 93645-59194
திருப்பூர் : J.R. சந்திரசேகர், 33-C, சேரன் நகர், சினி பார்க் தியேட்டர் ரோடு, திருப்பூர். செல் : 98428 96668
கும்பகோணம் : பிரசாத் போட்டோ ஸ்டுடியோ, 13-B, கோதண்டபாணி தெரு, கும்பகோணம். போன் : 0435 - 2433550
பெங்களூர் : S. பிரபாகரன், 38, சர்ச் ஸ்ட்ரீட் ரோடு, Opp. : கேத்திட்ரல் ஹைஸ்கூல், பெங்களூர்–25. ☎ 25511690, செல் : 93412-10728





பொருளார்ந்த வசதிகள் அனைத்தும் இருந்தும்கூட நாம் ஏதாவது ஒரு காரணத்துக்காக வேதனைப்படத்தான் செய்கிறோம். ஏனெனில் நமக்கு நம்மைப் போன்ற மனிதர்களுடன் உறவாடத் தெரியவில்லை. மனித உறவு என்பது பெரும் பிரச்னையாக ஆகிவிட்டது. வீடு பிரச்னையல்ல; வீட்டுச் சொந்தக்காரர்கள் பிரச்னை. கார் பிரச்னையல்ல; கார் சொந்தக்காரர்கள்தான் பிரச்னை. புன்னகை பிரச்னையல்ல; புன்னகை செய்யும் மனிதர்தான் பிரச்னை. எண்ணம் பிரச்னையன்று. சிந்தனை செய்பவர்தான் பிரச்னை. ஆகத் தனி நபர்தான் பிரச்னையே!

மனிதர் என்னும் இந்த முழு ஒழுங்கு முறையில் பிரச்னை என்னவென்று அறிய, எந்தப்பகுதியைக் கவனிக்க வேண்டும்? முழு உடலையும் கிழித்துப் பார்க்கும் அறுவை சிகிச்சை நிபுணருக்கு, உடலின் எந்தப் பாகத்தில் நோய் என்பது புலப்படவில்லையென்றால், நோய் தாக்கிய பகுதியை அவரால் குணப்படுத்தவே முடியாது. அறுவை சிகிச்சை செய்வதற்கு முன் உடலைப் பரிசோதித்து, நோய் தாக்கியிருக்கும் பகுதியைக் கண்டறிந்து, குறிப்பிட்ட அந்தப் பகுதியைத் திறந்து சிகிச்சை செய்யத் தயாராகிறார். இதைப் போல, நம் மனத்திலுள்ள எல்லா எண்ணங்களும் பிரச்னைகளல்ல. 'நான்' என்கிற எண்ணம் மட்டுமே பிரச்னை.

கோபம், வெறுப்பு, பொறாமை,

தமிழ் வடிவம்: சிவசங்கரி

11

சுவாமி சுத்தானந்தா

# மஞ்சள் ரோஜா நினைவுகள்...

பயம், கவலை போன்றவற்றுக்குக் காரணமான கிருமி எது? தனக்கு வயதாகிறது. நோய் வந்துவிடும் என்றெல்லாம் உடலுக்குப் பயம் கிடையாது; போய்ச் சேரும் இடத்தைப் பற்றியும் அதற்குத் தெரியாது; இறப்பைப் பற்றிய பயமும் கிடையாது. முதுமையைப் பற்றிய பயமும் கிடையாது. 'நான்'தான் பயப்படுகிறேன். செல்வத்துக்கு எந்தக் கர்வமும் இல்லை; 'நான்' தான் என் செல்வத்தை வைத்துக் கர்வப்படுகிறேன். அறிவு கர்வப்படுவதில்லை. 'நான்'தான் என் அறிவைக் கண்டு கர்வப்படுகிறேன். இந்த 'நான்' என்பது யார்?

ஆக, இத்தனை எண்ணங்களிலும் ஒரே ஓர் எண்ணம்தான் பிரச்னையே. மற்ற எண்ணங்கள் வெறும் நினைவுகள் மட்டுமே.

ஒரு மஞ்சள் ரோஜாப் பூவைப் பாருங்கள். இது ஒரு பொருள். இதில் சந்தோஷமோ, துக்கமோ கிடையாது. இந்த மஞ்சள் ரோஜாவை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா? உங்களுக்குப் பிடித்திருந்தால், ஒருவேளை முதல் முறையாக உங்கள் காதலியைப் பார்த்தபோது அவளுக்கு இந்த மஞ்சள் ரோஜாவைப் பரிசளித்திருக்கலாம். அது ஓர் இனிய நினைவு. ஆகவே, மஞ்சள் ரோஜாவைப் பார்க்கையில் நல்ல நினைவுகள் மறுபடி வரும். இன்னொருவருக்கு இந்த ரோஜா பிடிக்காமல் போகலாம்... இதைப் பரிசளித்தவர் அவரை ஏமாற்றிவிட்டாரோ என்னவோ!

மற்றொரு நபர் ரோஜாவை இலட்சியமே செய்யவில்லை. ஒருவருக்குப் பிடிக்கிறது; இன்னொருவருக்குப் பிடிக்கவில்லை; மற் றொருவருக்கு இலட்சியமில்லை. 'பிடிப்பது' 'பிடிக்காதது', 'அலட்சியம்' - ஆகியவையெல்லாம் அந்தப் பொருளில் இல்லை; மனிதர்களின் மனங்களில்தான் இருக்கின்றன. அந்தப் பொருளைப் பற்றிய எண்ணம் தான் 'அறிவு'. பொருளைப் பொருத்தே அதைப் பற்றிய பார்வையும் அமையும். பார்வையின் காரணமாகத்தான் எண்ணமும் ஏற்படுகிறது.

ஆகவே, உடலுக்கு வயதாகிறது என்று மனம் சொன்னால், 'நான்' பயப்பட்டு, 'எனக்கு வயதாகிக் கொண்டு வருகிறது' என்று உணர்கிறேன். எனவே

தான், இந்த 'நான்' தூங்கப்போகும் போது நமக்குப் பிரச்னையே இருப்பதில்லை. சிறுவயதில் இருப்பதைப் போல 'நான்' பலம் பெறாமல் இருந்தாலும் நமக்குப் பிரச்னையில்லை. நமக்கு ஞானம் பிறந்து, 'நான்' என்பது என்னவென்று தெரிந்து கொண்டு விட்டாலும், பிரச்னையில்லை. அறியாத மனிதர்தான் பிரச்னை. அறியாதவர் என்றால், 'நான்' குறித்த பிரக்ஞையில்லாதவர்.

தண்ணீரைப் பற்றி அறியாதது தவறன்று... அசுத்த நீரைக் குடித்து உடல் கெட்டுப்போகும், அவ்வளவுதான்.



''பொங்கலுக்கு நான் சொந்த ஊருக்குப் போகப் போறேன்.''

''ஏன் அவ்வளவு தூரம் போகணும்... ஓட்டலுக்கே போயேன்...''

- நரசிம்மன்

ஆனால், 'நான்' என்பதைப் பற்றி அறியாமல் இருந்தால், அது எல்லாவற்றையும் தன்மேல் இழுத்துக் கொண்டு விடும். தண்ணீர், உலோகம், தத்துவம், இசை - போன்றவற்றைப் பற்றிய அறியாமை என்பது, குறிப்பான ஒன்று... நமக்குத் தெரிந்திருக்கலாம்; அல்லது தெரியாமல் போகலாம். அது பெரிய விஷயமன்று. ஆனால், ''என்னைப் பற்றித் தெரிந்துகொள்வது எனக்கு அவசியமில்லை'' என்று நாம் சொல்ல முடியாது.

ஒருநாள் தெருவில் நடந்து செல்லும் முல்லா, பெரிய நகரம் ஒன்றை அடைகிறார். அங்கு ஏராளமான மக்கள் இருப்பதைப் பார்த்து அவருக்குக் குழப்பம் ஏற்படுகிறது. 'இந்தக் கூட்டத்தில் நான் தொலைந்துபோய் விட்டால், அல்லது தூங்கியெழுந்ததும் என்னையே எனக்குத் தெரியாமல் போய்விட்டால், நான் கஷ்டத்தில் மாட்டிக்கொள்வேன். அதனால் என் கால்நுனியில் ஒரு பலூனைக் கட்டிக் கொண்டுவிட்டால், எழுந்திருக்கும் போது, நான் காணாமல் போக மாட்டேன்' என்று நினைக்கிறார்! பலூன் ஒன்றை வாங்கி, தன் கால்களில் கட்டிக்கொண்டு உறங்கப் போகிறார். அந்த அறைக்குள் நுழையும் இளைஞன் ஒருவனுக்கு, முதலில் அந்தப் பலூன்தான் கண்ணில் படுகிறது. விளையாட்டாக அவன் முல்லாவின் காலிலிருந்து அதை அவிழ்த்து மற்றொருவனின் காலில் கட்டிவிட்டுப் படுத்துவிடுகிறான். காலையில் எழுந்திருக்கும் முல்லா, தான் தொலையவில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள பலூனைத் தேடுகிறார். அது மற்றொருவனின் காலில் இருப்பதைப் பார்த்து, அவனிடம் சென்று, ''நீதான் நான் என்றால், நான் யார்?'' என்று கேட்கிறார்! இப்படித்தான் நாமும் நம்மை அறியாமல் நம்மை இழந்து நம்மையே தேடிக் கொண்டிருக்கிறோம்!

(தொடரும்)





அம்ரிதா

# மாதுரி போய் அம்ரிதா..!

**ம**த்திய அமைச்சர் ஜெயராம் ரமேஷ் ஒரு பொருளாதார வல்லுநர். கொஞ்சம் ஹைடெக் மனிதர். தனக்கென்று ஓர் இணைய தளம் வைத்திருந்தார். ஆனால், அமைச்சருக்கும் அவரது இணைய தளத்தைப் பராமரித்து வந்த மென்பொருள் நிறுவனத்துக்கும் என்ன பிரச்னையோ தெரியவில்லை. அமைச்சரின் இணைய தளம் திடீரென்று காணாமல் போய்விட்டது. அதற்காக அமைச்சர், அந்த மென்பொருள் நிறுவனத்துடன் மல்லுக்கு நிற்கவில்லை. மாறாக, புதிதாக வேறு ஓர் இணையதளத்தை உருவாக்கிவிட்டார். அவரது புதிய இணைய தளம் : www.jairamramesh.in

**வி**ருதுகள் என்றாலே சர்ச்சைக்குக் குறைவில்லை. இது கர்னாடகாவில் சமீபத்தில் நிரூபணமாகியுள்ளது. அண்மையில், கன்னடத் திரைப்படங்களுக்கான விருதுகளை கர்னாடகா அரசு அறிவித்தது. அதில், மாதா என்ற படத்தில் நடித்ததற்காக, நடிகர் ஜக்கீஷுக்குச் சிறந்த துணை நடிகருக்கான விருது தரப்படுவதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால், மாதா படத்தில் ஜக்கீஷ்தான் ஹீரோ! அப்செட் ஆன ஜக்கீஷ், ஹீரோவான எனக்கு எப்படி துணை நடிகருக்கான விருது தரலாம் என்று கேட்டு, விருதை ஏற்க மறுத்துவிட்டார்.

**எ**ளிமைக்குப் பேர் போன அரசியல்வாதி கேரளாவின் ஏ.கே.ஆண்டனி. தற்போது அவர் மத்திய பாதுகாப்பு அமைச்சராக இருந்தபோதிலும், டெல்லியில் பிரம்மபுத்ரா காம்ப்ளெக்சில் வசித்து வந்த அபார்ட்மென்ட்டே போதும்; பெரிய பங்களா தேவை இல்லை என்று கூறிவிட்டார். அது மட்டுமல்ல... டெல்லியில் அமைச்சருக்கு மிகவும் பிடித்த உணவகம் கேரளா பவன் கேன்ட்டீன் தான்!

**இ**ந்தி நடிகை மாதுரி தீட்சித்தின் பரம ரசிகராகி, அவரை ஓவியங்களாகத் தீட்டியதுடன், அவரை வைத்து ஒரு படமும் எடுத்தார், பிரபல ஓவியர் எம்.எஃப். ஹுசைன். இப்போது அவரது கவனத்தை ஈர்த்திருப்பவர் நடிகை அம்ரிதா ராவ். அவர் நடித்த 'விவாஹ்' என்ற படத்தைப் பார்த்துவிட்டு, அவரது ரசிகராகிவிட்ட ஹுசைன், இப்போது அம்ரிதாவின் ஓவியங்களாக வரைந்து தள்ளப் போகிறார்!

- எஸ்.சி.எம்.

# பொங்கும் சிரிப்பு எங்கும் தங்குக!



''சாம்பார், ரசத்துக்கு எல்லாம் புளியைக் கம்மியா போடு, விமலா...''

''ஏங்க...?''

''நீ சமைக்க ஆரம்பிச்சப்பவே என் வயித்துல புளி கரைய ஆரம்பிச் சுடுச்சி...''

- கே. ஆனந்தன்

''வளர்ற பையன் காதல் வசப்பட்டா எப்படி இருப்பான்?''

''உளர்ற பையனா...!''

- தஞ்சை தாமு



"என்ன தைரியமிருந்தால் இளவரசியிடமே உள்ளத்தை அள்ளித்தான்னு கேட்ப?"

"கஜானாவில் உள்ளதை அள்ளித்தான்னு கேட்பதற்குப் பதில் தவறி அப்படிக் கேட்டுட்டேன் மன்னா...!"

- சி.பரத்



''என் பொண்டாட்டிக்கு 'சீரியல் பைத்தியம்' முத்திப் போயிடுச்சு''

''எப்படிச் சொல்றீங்க?''

''சீரியல்ல ஒரு கதாபாத்திரத்துக்குத் தூக்குத் தண்டனை விதிச்சுட்டாங்களாம். அதுக்கு இவ ஜனாதிபதிகிட்ட போய்க் கருணை மனு அனுப்பியிருக்கான்னா பாருங்களேன்...!''

- குட்டி பிரசன்னா, கரூர்.

"மன்னர் ஏன் கடும் கோபத்தில் உள்ளார்?"

''அவருடைய செல்ஃபோனில் அவர் புறமுதுகிட்டோடும் போது அலறும் அலறலை ரிங் டோனாக வைத்து விட்டார்களாம்.

- சாயம் வெ. ராஜாராமன்





சொக்கலிங்கம் என்பவர் எங்களிடம் வந்தார். இரவில் அடிக்கடி சிறுநீர் போவதாகவும், ஆனால் சிறுநீர் முழுமையாகப் போகாமல் பெருந் தொல்லையாக இருக்கிறது என்றும் வருத்தப்பட்டார். அவரைப் பரிசோதித்தபோது அவருக்கு ப்ராஸ்ட்ரேட் அழற்சி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. மேலும் அவர் சிறுநீர் கழித்த பிறகும் சிறுநீர்ப்பையில் 150 மி.லி. சிறுநீர் தேங்கியிருந்தது! இதனை ஆயுர்வேதத்தில் 'மூத்திர மார்க ரோதம்' என்கிறோம்.

சிறுநீர்க் குழாயையொட்டி 'ப்ராஸ்ட்ரேட்' சுரப்பி அமைந்துள்ளது. இந்த ப்ராஸ்ட்ரேட் சுரப்பி வீங்கும்போது அவ்வீக்கம் சிறுநீர்க் குழாயை அழுத்தி, சிறுநீர் வெளியேற்றத்தில் தடை ஏற்படுத்துகிறது. சிறுநீர்ப் பை சிறுநீரை வெளியேற்றச் சிரமப்படுகிறது. இதன் தொடர்ச்சியாக சிறுநீர் முழுமையாக வெளியேற்றப்படாமல், குறிப்பிடத்தக்க அளவு சிறுநீர், பையிலேயே தங்கி விடுகிறது. இப்படி நீர் தேங்கும்போது சிறுநீர்ப் பையில் தொற்று மற்றும் கற்கள் உண்டாகலாம். இந்த அடைப்பு நீண்ட காலமாகத் தொடருமானால் அது சிறுநீரகத்தைப் பாதிக்கும். சில நேரங்களில் வயிற்றுக்குக் கீழே வலியும், மூத்திர கருச்சரம்' எனும் எரிச்சலும் உண்டாகும். சில நேரங்களில் ரத்தம்கூட சிறுநீர்த் துவாரம் வழியே வெளியேறும்.

பெரும்பாலும் ஐம்பது வயதைக் கடந்த ஆண்களுக்கே இத் தொல்லை ஏற்படும். இரவு தூக்கம் கெடும் அளவுக்கு அடிக்கடி எழுந்து போய் சிறுநீர் கழிப்பது, கழிப்பறையில் நீண்ட நேரம் செலவிடுவது, அதன் பிறகும் சிறுநீர் வெளியேற்றப்படாத உணர்வுடன் சங்கடப்படுவது ஆகியன இதன் அறிகுறிகள் என்பதையும் கண்டறியலாம். (உரிய வேகத்தில், உரிய அளவில் அது வெளியேற வேண்டும்) அல்ட்ரா சவுண்ட் ஸ்கேன் மூலமாக-ப்ராஸ்ட்ரேட் சுரப்பியின் வீக்கம், சிறுநீர் கழித்த பிறகு சிறுநீர்ப் பையில் தேங்கியுள்ள சிறுநீரின் அளவு ஆகியவற்றையும் கண்டறியலாம்.

பெண்களுக்கு மாதவிடாய் நிற்கும் பருவ வயதை ஒத்தது ஆண்களுக்கு ஏற்படும் இப் பிரச்னை. ஹார்மோன் பிரச்னையாகவும் அறுவை சிகிச்சைக்குரிய நிலையாகவும் ஆங்கில மருத்துவம் இதனை அணுகிறது.

ஆயுர்வேதத்தில் இதனை எப்படி அணுகுகிறோம் என்றால், சிறுநீர் சீராகக் கழிப்பது அபான வாயுவைச் சார்ந்திருக்கிறது; இந்த அபான வாயு, கபத்தினால் தடை செய்யப்பட்டால் சிறுநீர்த் தடை ஏற்படுகிறது. ஆக, ப்ராஸ்ட்ரேட் சுரப்பியின் வீக்கம் கபத்தினுடைய விருத்தி என்ற அணுகுமுறையைக் கொள்கிறோம். உதா வர்த்தகம் என்ற வாயுவும் இந்நிலைக்குக் காரணம். ஆயுர்வேதத்தில் 'குல்மம்' என்ற நோயில் சிறுநீர்ப்பை முக்கிய அங்கமாகக் கருதப்படுகிறது.

சொக்கலிங்கத்தைக் குணப்படுத்த மாவிலங்கம் சேர்ந்த வருணாதி கஷாயம், சுகுமார கஷாயம் ஆகியவற்றைக் கொடுத்தேன். அதோடு தன்வந்தர தைலத்தைச் சூடாக்கி தொப்புள் பகுதியில் தடவி, 'அவகாஹம்' எனும் தொட்டிக் குளியலை (உடலின் பிருஷ்ட பாகமும் அடிவயிறும் நீரில் பொருந்தும்படி அமர்வது) செய்யச் சொன்னேன். அதன்பிறகு மதிய உணவை உண்ட பிறகு பிப்பல்யாதி தைலம் சேர்ந்த வஸ்தியினை ஆசனவாய் வழியாகக் (எனிமா) கொடுத்தேன். எனிமாவுக்குப் பிறகு வஸ்தியாமயாந்தகம் என்ற க்ருதத்தினைக் கஞ்சியோடு சேர்த்துக் கொடுத்தேன். இவற்றோடு

12

டாக்டர் எல்.மஹாதேவன்



தசமூல ஹரீதகி என்ற கடுக்காயினால் ஆன மருந்துகளைக் கொடுத்தேன். இவற்றின் பயனால் மூன்றே மாதத்தில் நல்ல முன்னேற்றம் காணப்பட்டது.

இந்நோயை வேறு தினுசில் அணுகி பல மருத்துவர்கள் சிறுநீரை உற்பத்தி செய்யக் கூடிய நெருஞ்சில், சதாவரி போன்ற மருந்துகளையே கொடுப்பார்கள். பிரச்னை சிறுநீர் உற்பத்தியாவதில் இல்லை; அதை வெளியேற்றுவதில்தான் இருக்கிறது. அதனால் சிறுநீர் சிரமமின்றி வெளி யேறக்கூடிய மருந்துகளையே கொடுக்க வேண்டும்; உட்கொள்ளவும் வேண்டும்.

ப்ராஸ்ட்ரேட் அழற்சிக்கு கோஷுராதி குக்குலு, புனர்னவதி குக்குலு, முருங்கைப்பட்டைக் கஷாயம், நாயுருவி போன்றவை சிறந்த மருந்துகளாகும். நீர்க்கடுப்பு இருந்தால், அதனைக் குணப்படுத்த சதாவரி, நெருஞ்சில், கரும்புவேர், தர்பைப்புல் போன்றவற்றைக் கஷாயமாக வைத்துக் குடிக்கலாம். இது சிறுநீர் எரிச்சலுக்கும் சிறந்த மருந்து.

உணவு விஷயத்தில் காரம், புளி, எண்ணெய் இவற்றை எட்டி நின்றே பார்க்க வேண்டும்; கிட்டே போகக் கூடாது! மலச் சிக்கல் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குளிக்கும் முன்பு நல்லெண்

# அழுத்தும் ஆபத்து!

ணெயைத் தொப்புளில் தடவி, பிறகு குளிக்க வேண்டும். அப்யங்கம் செய்வது நல்லது. சுகர், பிரஷர் போன்றவற்றுக்காக ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தால் அதனை நிறுத்தக் கூடாது. ஒற்றை மூலிகைகளான மாவிலங்கம், கடுக்காய் சிலாஜது, சேராங்கொட்டை போன்றவையும் சிறந்த மருந்துகளாகும்.

(தொடரும்)



முருங்கை விதை



"லட்சம் பேர் எழுதிய பொதுத்தேர்வில் இந்த சுஜானா எப்படி முதல் இடம் பிடித்தேன்? +2 பொதுத் தேர்வில் முதல்முறையாக 1190 மதிப் பெண்கள் எடுத்த சாதனையாளர் என்கிற விசேஷமான பெயர் எனக்கு மட்டும் எப்படிக் கிடைத்தது?

மாயாஜால வித்தைகள், ரகசியங்கள் என்று ஒரு புடலங்காயும் கிடையாது. நான் பின்பற்றிய வழிமுறைகளை, எனக்குக் கொடுக்கப்பட்ட அறிவுரைகளை இப்பொழுது அப்படியே உங்களுக்குத் தருகிறேன். என்னைப் போல நாலுபேர் உருவாவதில் எனக்கும் மகிழ்ச்சிதானே!"

### எதற்காக +2 தேர்வை எழுதுகிறோம்?

- விரும்பிய கல்லூரியில் பொறியியல் அல்லது மருத்துவம் படிக்க சீட் கிடைக்க வேண்டும் என்பதற்குத்தானே! எனில் அதற்குரிய விஷயங்களில் மட்டுமே கவனம் செலுத்துவதுதான் புத்திசாலித்தனம்.
- நம் நோக்கம் இன்ஜினியரிங், டாக்டர் படிப்பு என்பதால், கணிதம் மற்றும் அறிவியல் பாடங்களில் நாம் எடுக்கும் மதிப்பெண்கள் மட்டும்தான் நாளை நமக்குக் கைகொடுக்கப் போகின்றன.

### சிறுதுளிகளாகச் சேரும் நேரம்

- பல்லைக் கடித்துக் கொண்டாவது முதல் வேலையாக டீ.வி.யைத் துறந்து விடுங்கள். டீ.வி. பார்க்க ஆரம்பித்தால்- குறிப்பாக, கண்களுக்குச் சோர்வு ஏற்படும்.
- சினிமா... என்னது சினிமாவா? அரைமணி நேர சீரியலே வேண்டாம் என்கிறேன். மூன்று மணி நேர சினிமா எல்லாம் டூ மச்!
- அடுத்தது, இதோ ஜனவரி பிறந்து விட்டது. எக்ஸ்ட்ராகரிகுலர் ஆக்டிவிடீஸ் என்று நமக்குக் கூடுதல் சிறப்பு சேர்க்கும் அத்தனை சமாசாரங்களையும் ஒழித்துக் கட்டுங்கள். பரீட்சை முடிகிற வரைதான். சப்ஜெக்ட் தொடர்பாகத் தவிர நண்பர்களிடம் எக்காரணம் கொண்டும் போனில் பேச மாட்டேன் என்று போன் மீது அடித்துச் சத்தியம் செய்துகொள்ளுங்கள்.
- இப்படிச் சிறுதுளிகளாகச் சேர்க்கும் நேரம்தான் பின்னால் நமக்கு நீண்ட கால அவகாசத்தைக் கொடுக்கப் போகிறது.

### அறிந்து, புரிந்து கொள்ள:

- நான் +2 படிக்கும்போது எக்காரணம் கொண்டும் ஐ.ஐ.டி.க்கு முயற்சி செய்யக்கூடாது என்றொரு முக்கிய முடிவு எடுத்திருந்தேன். அதாவது, தமிழ்நாட்டிலுள்ள ஏதாவது பொறியியல் கல்லூரியில் சீட் வாங்குவது மட்டும்தான் என் எண்ணமாக இருந்தது. ஆம், இங்குள்ள கல்லூரிகளுக்கு மட்டுமன்றி ஏ.ஐ.ஈ.ஈ., ஐ.ஐ.டி., பிட்ஸ் பிலானி என்று பல்வேறு கல்லூரிகளுக்கும் வலைவீச முயன்றால் ஆபத்தில் போய் முடியும்.

### டியூஷன் அவசியமா?

இப்பொழுது பள்ளிகளில் சுமாரான மாணவர்களை இனம் கண்டு, தகுந்த பயிற்சிகளை அவர்களாகவே அளிக்கின்றனர். இதையும் தாண்டி டியூஷன் வேண்டுமென்றால் வீட்டுக்கு அரு



சுஜானா, 2005 ஆம் வருடப் பொதுத்தேர்வில் 1190 மதிப்பெண்கள் எடுத்து மாநில அளவில் முன்னிலை பெற்றவர். இப்போது அண்ணா பல்கலைக்கழகத்தில் இயந்திரவியல் பிரிவில் இரண்டாம் வருடம் படித்துக்கொண்டிருக்கிறார்.

கில் டியூஷன் சென்டர் பார்த்துக் கொள்வது நல்லது. நீண்ட தூரப் பயணம் நேரத்தை வீணாக்கி உடலையும் சோர்வாக்கித் தூக்கத்தைத்தான் ஏற்படுத்தித் தரும்.

### திட்டமிடுங்கள்:

எல்லாப் பள்ளிகளிலும் டிசம்பரிலேயே போர்ஷன்களை முடித்திருப்பார்கள். ஜனவரிக்குள் பாடங்களிலுள்ள எல்லாச் சந்தேகங்களையும் நிவர்த்தி செய்துவிட வேண்டும். ஸ்டடி ஹாலிடேஸில் பொதுத்தேர்வு அட்டவணைப்படி திட்டமிட வேண்டும். எந்தெந்தத் தேர்வுகளுக்கு விடுமுறை குறைவோ அவற்றுக்கேற்ப சரியாகத் திட்டமிட்டுக் கொள்ள வேண்டும். படிக்கும் போதும் சரி, தேர்வு எழுதும் போதும் சரி, நூற்றுக்கு நூறு வாங்கித்தான் ஓயப் போகிறேன் என்றெல்லாம் நினைக்க வேண்டாம். ஒழுங்காக எழுதுங்கள். தானாகப் பலன் கிடைக்கும். மனம் சலனமில்லாமல் இருக்க தெய்வத்தை நாடுங்கள்.






### தேர்வுக்கு வருவோம்:

முதலில் பத்து மதிப்பெண்களுக்கான விடைகளை முடித்து விடுவது நலம் பயக்கும். இரண்டு மதிப்பெண்களிலெல்லாம் கொஞ்சம் ட்ரிக்கான விஷயங்கள் கலந்திருக்கும். அதில் யோசித்துக் கொண்டிருந்தால் நேரம் ஓடோடிவிடும்.

பள்ளியில் நடத்தப்படும் தேர்வுகளில் நீங்கள் ஆயிரத்து நூற்றைம்பது மதிப்பெண்கள் வாங்குவதே பெரும்பாடாக இருக்கும். ஆனால் பொதுத்தேர்வில் நிச்சயம் பள்ளியில் எடுத்ததைவிட அதிகமாகத்தான் மதிப்பெண்கள் வாங்குவீர்கள்.

### முதலும்... இறுதியும்...

நான் முதலாகவும் இறுதியாகவும் சொல்ல நினைப்பது இதுதான்: உங்களுடைய நண்பர் எப்படிப் படிக்கிறார் என்று ஒரு போதும் பார்க்காதீர்கள். ஒருவருக்கொருவர் படிக்கும் விதத்தில் வித்தியாசப்படலாம். நாம் எப்படிப் படிக்கிறோம் என்பதில்தான் கவனம் இருக்க வேண்டுமே தவிர, அடுத்தவர்மீது பதியவே கூடாது.

**மாணவர்களே மாணவர்களுக்கு வழிகாட்டும் தொடர்**





# வரிச்சலுகைக்குத் தமிழ்,

● குவளை எழில், சென்னை

**? செஞ்சி ராமச்சந்திரன் தனது பேட்டியில் "ம.தி.மு.க.வைப் பிளப்பதாகவும் இல்லை; தி.மு.க.வில் சேர்வதாகவும் இல்லை" என்று கூறியது புதிதாக உள்ளதே - விடை என்னவாக இருக்கும்?**

! அதுதான் அரசியல்! கட்சியைப் பிளந்து தனிக்கட்சி ஆரம்பிப்பதாக யாரும் கூறமாட்டார்கள். பிரிந்துவரும் கட்சிதான் மெய்யான தாய்க்கட்சி என்றுதான் பேசுவார்கள். சொத்து, சின்னம், பிரபலமடைந்த கட்சியின் பெயர் என்று பல காரணங்கள் இதற்கு உள்ளன. போகப் போகத்தான் நிலைமை தெளிவாகும்.

● மல்லிகைமன்னன், மதுரை - 17

**? ஆடம்பர வாழ்க்கை ஆசையில் ஒரு சிறுவனை அநியாயமாய்க் கொலை செய்திருக்கிறார்களே சில மாணவர்கள். இது கலாசார சீரழிவின் மொத்த அடையாளம்தானே?**

! ரொம்ப கரெக்ட். முதல் குற்றவாளி, சினிமா - டீ.வி. இரண்டாவது குற்றவாளி, ஆடம்பரத்துக்கு வழிகாட்டும் அரசியல்வாதி. மூன்றாவது குற்றவாளி, பிள்ளைகளின் உடல் வளர்ச்சியுடன் மன வளர்ச்சியிலும் கவனம் செலுத்தாத பெற்றோர். நான்காவது குற்றவாளி, சரியான வாழ்க்கைக் குறிக்கோளை அமைத்துத் தராத கல்விமுறை. ஐந்தாவது குற்றவாளிதான்- அந்த மூன்று மாணவர்கள்.

● எஸ்.எஸ்.நாராயணன், சென்னை - 40. ★

**? பெரியார் படத்துக்கு இசையமைக்க வாய்ப்பு கிடைத்ததற்குக் 'கடவுளுக்கு நன்றி' சொல்கிறாரே வித்யா சாகர் - இது எப்படி இருக்கு?**

! அழகாக, இயல்பாக, நேர்மையாக இருக்கு.

● ஆரூர் சேகர், சென்னை

**? வரிச் சலுகைக்காக 'வரலாறு' என்று தமிழில் பெயர் வைத்துவிட்டு, அதன் அருகிலேயே 'History of God Father' என ஆங்கிலத்தில் விளம்பரப் படுத்துவது அரசாங்கத்தை ஏமாற்றும் வேலைதானே?**

! தமிழ் உணர்வு தலைப்பில் மட்டும்தானா இருக்கிறது? தமிழ் உணர்வும் தாய்மொழிப் பற்றும் இரத்தத்திலும் நெஞ்சத்திலும் ஊறி இருக்கவேண்டியவை; அபத்தச் சலுகைகள் இதைப்போன்று ஏமாற்றத்தான் வைக்கும்.

● குட்டி பிரசன்னா, கரூர்

**? சதாம் ஹுசைனைத் தூக்கில் போட்டுவிட்டதால் தீவிரவாதம் முற்றிலும் அழிந்துவிடும் என அமெரிக்கா நினைப்பது சரியா?**

! சதாம் தூக்கிலே தொங்கியது அதற்காக அல்ல. பதவிக்கு வந்ததும் நூற்றுக்கணக்கான ஷியா முஸ்லிம்களை - ஈராக் பிரஜைகளை - கொன்று குவித்தார் என்பதற்காக. ஆனால் ஈராக்கில் அமெரிக்காவின் மேலா



• ரஜினி, சங்கர், சிவாஜி!



• சொத்து, சின்னம், சொந்தம்!



• முறைப்பு, மாற்றம், சப்தம்!



• பொய், படையெடுப்பு, பலி!

தராசு

திக்கம் நீடிக்கும்போதே இந்தத் தண்டனை வழங்கப்பட்டதுதான் தவறாகிவிட்டது. சதாம் அணு ஆயுதங்களைக் குவித்து வைத்துள்ளார் என்று பொய்க் காரணம் கூறி, படையெடுத்து, பல்லாயிரக் கணக்கில் ஈராக்கிய மக்களைக் கொன்ற ஜார்ஜ் புஷ்ஷுக்கு என்ன தண்டனை? யார் தருவார்கள்!

● மு.செந்தில்குமார், சோமரசம் பேட்டை

**? பிரதமராகும் தகுதியும் திறமையும் தற்போதைய குடியரசுத் தலைவருக்கு இருப்பதாக என் மனதுக்குப் படுகிறது. உங்கள் கருத்து?**

! மன்மோகன் சிங் போலவே அவருக்கும் தகுதி, திறமை, நேர்மை எல்லாமே இருப்பது உண்மைதான். ஆனால், அரசியலில் குதிக்கும் மனமும் கட்சி பலமும் ஆதரவும் இல்லையே!


* திறமை, தகுதி, உண்மை!

# விளம்பரத்துக்கு ஆங்கிலமா?

● கவிதா ராஜேஸ்வரி, எசனை ❒

**? தயாநிதி மாறன் தொலைத் தொடர்பு அமைச்சரானதால் தம்முடைய செல்போன் இணைப்பையே மாற்றிவிட்டதாக எஸ்.வி.சேகர் கூறுவது அபத்தமாக இல்லையா?**

! அபத்தம்தான். பி.எஸ்.என்.எல்.லே தயாநிதிக்குச் சொந்தம் என்கிற மாதிரி இருக்கு சேகரின் ரியாக்ஷன். அரசு நிறுவனம் என்பதால் அது மக்களுக்குச் சொந்தமான நிறுவனம். பயனீட்டாளராகித் தட்டிக் கேட்க சேகருக்குக் கூடுதல் உரிமை உண்டு!

● பி.பாலாஜி கணேஷ், சிதம்பரம்

**? சிவாஜி படத்தில் ரஜினி - ஷங்கர் யாரை மக்கள் அதிகம் எதிர்பார்க்கிறார்கள்?**

! ரஜினியின் தனித்தன்மை; ஷங்கரின் பிரமாண்டம் இரண்டும் கலந்த சிவாஜியைத்தான் எதிர்பார்க்கிறார்கள். ●


* அழகு, இயல்பு, நேர்மை!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**கவிதா ராஜேஸ்வரி,**
எசனை
(பெரம்பலூர்) - 621 219

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**எஸ்.எஸ்.நாராயணன்,**
பிளாட் 1250, ஃபிளாட் 6,
குருகிருபா அபார்ட்மெண்ட்ஸ்,
19ஆவது மெயின் ரோடு,
அண்ணா நகர் மேற்கு
சென்னை - 600 040.





# குருவுக்கு ஒரு தலம்!



ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள்... குருவுக்கெல்லாம் குருவாக விளங்கியவர். திருவண்ணாமலையில் பல காலம் தங்கி அருள்பாலித்தவர். பல மகான்களால் சிறந்த சித்த புருஷராக அடையாளம் காட்டப்பட்டவருக்கு சென்னை மாடம்பாக்கத்தில் தனி ஆலயம் அமைக்கப்பட்டிருக்கிறது.

"இறை பக்தியைப் போலவே குரு பக்தியும் மிகவும் முக்கியம். அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ நினைப்பவர்கள், சோதனைகளிலிருந்து விடுபட விரும்புபவர்கள், தெய்வத்தினை அடையத் துடிப்பவர்கள் அனைவரும் செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். அது குருநாதரிடம் சரணடைவது. அவர் அனைத்துக்கும் வழிகாட்டுவார். இதுதான் சேஷாத்ரி சுவாமிகளுக்கு ஆலயம் அமைக்க என்னைத் தூண்டியது" என்கிறார் கோயில் ஸ்தாபகரான கே.வி.எல்.என். சர்மா.

சேஷாத்ரி சுவாமிகளின் ஆலயத்தோடு இங்கு பதினெட்டு சித்தர்களுக்கும் தனித் தனி ஆலயங்கள் உள்ளன. ஆண்டுதோறும் ஜனவரி 10, 11, 12 தேதிகளில் நடக்கும் சத்குரு ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகளின் ஆராதனை விழா, இங்கு மிகவும் பிரசித்தி பெற்ற ஒன்று. இந்நாட்களில் மாடம்பாக்கமே விசேஷத்தில் மிதக்கும்.

"அருணாச்சலேஸ்வரரின் பெருமை சொல்ல முடியாத அளவுக்கு விரிவானது. அதனை உணர்ந்த சைவர்கள் லிங்கமாகப் பார்க்கிறார்கள். சக்தி உபாசகர்கள் மகா மேருவாக வழிபடுகிறார்கள். வைணவர்கள் இம்மலையை சுதர்சன சக்ரமாக வழிபடுகிறார்கள். அதைப் போலவே திருவண்ணாமலையில் ஞானதீபம் ஏற்றி சூன்ய இருள் கற்றிட்ட மகான் ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகளையும் இனம், மொழி, மதம் வேறுபாடின்றி அனைவரும் வணங்குகிறார்கள்.

வருத்தம், கவலை, பிரச்னை, மன உளைச்சல் என வருவோர் மாடம்பாக்கத்தில் காலடியெடுத்து வைத்ததுமே தங்களை ஆட்கொண்டு ஆட்டிப் படைத்த தீயசக்திகள் விலகியதை உணர்கிறார்கள்" என்கிற சர்மா, "இத்தலம் திருமண தோஷம், புத்திரசோகம் போக்கும் தலம். கிரகங்களின் துன்பங்களையும் தீய சக்திகளின் நடமாட்டத்தையும் கட்டுப்படுத்தும்" என்கிறார்.



- அருள்செல்வன்



# அதுதான் காரணம்!

"ஆனாலும் அந்த டைரக்டர் விஜயராஜுக்கு நீங்க கொடுத்தது அதிகம் ஸார்... அவருக்கு நீங்க உதவி பண்ணணும்னு விரும்பியிருந்தா ஒரு லட்சமோ, ரெண்டு லட்சமோ கொடுத்து இருக்கலாம்... அதை விட்டுட்டு, வீட்ல சும்மா இருக்கற அவருக்குப் பட சான்ஸ் கொடுத்து, அதுக்குச் சம்பளமா இருபது லட்ச ரூபாயும் கொடுக்கறது ரொம்ப அதிகம்..." - உதவியாளர் செந்தில் சொன்னது காதில் விழுந்தாலும், அமைதியாக இருந்தார் படத் தயாரிப்பாளர் வைரவன்.

வைரவன் மிகப் பெரிய தயாரிப்பாளர். அவரின் வி.என்.எஸ். பட நிறுவனம் ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக நூற்றுக்கும் மேற்பட்ட படங்களைத் தயாரித்துள்ளது. அதில் பெரும்பாலானவை வெள்ளி விழா, வெற்றி விழா கண்ட படங்கள்.

விஜயராஜும் சாதாரண டைரக்டர் அல்ல. இருபது வருடங்களுக்கு முன்பு மிகப் பெரிய டைரக்டர். திடீரென அவர் டைரக்ட் செய்த சில படங்கள் ஓடாமல் நஷ்டத்தைத் தழுவ, பட உலகம் அவரைப் புறக்கணிக்க ஆரம்பித்தது. அவர் கெட்ட நேரம் தன்னை நிரூபிக்க அவர் சொந்தமாகத் தயாரித்து, டைரக்ட் செய்த படமும் ஓடாமல் போக, ஏகப்பட்ட கடன்! இன்று சம்பாதித்த எல்லாவற்றையும் இழந்து ஒண்டிக் குடித்தன வாசம்.

"நீ சொல்றது தப்பு செந்தில்... அவருக்குத் தன்மானம் அதிகம்... நீ சொல்ற மாதிரி பணம் கொடுத்திருந்தா கண்டிப்பா அவர் வாங்கியிருக்க மாட்டார். எனக்கு நல்லா தெரியும்- அவரைப் பத்தி." கம்பீரமா பேர், புகழ் பணத்தோட வாழ்ந்துட்டு இப்போ அடுத்தவங்க கையை எதிர்பார்க்க வேண்டியிருக்கேனு கூனிக் குறுகிப் போயிருப்பார். ஒரு நல்ல, திறமையான கலைஞனை அப்படிப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. இப்போ பாரு... அவர் நிலைமையைப் பார்த்து உதவி பண்ண விரும்பின எனக்கு, நான் விரும்பினபடியே உதவின மாதிரியும் ஆச்சு. அவர் திறமையை மதிச்சுப் படம் கொடுத்த மாதிரியும் ஆச்சு. சாப்பாட்டுக்கே இல்லான்னா கூட எப்பவும் ஒரு கலைஞன் தன்னைப் பாத்து யாரும் பரிதாபப்படறதை விரும்ப மாட்டான்... தெரிஞ்சுக்கோ..." என்றார் வைரவன்.



**கே.ஆனந்தன்**



பரவத் துடிக்கும் B.T. நெல், பாமர மக்களுக்குத் தெரியாத பல விஷயங்களைத் தெரியப் படுத்தியது.

சென்னை, ஆர். விஜயலக்ஷ்மி



அவர்கள் துள்ளித் திரிந்த (காலம்) நினைவுகளை விவரித்த விதம் யதார்த்தமாகவும் இறுதியில் மனத்தைத் தொடும் வகையிலும் இருந்துச்சிய்யா!

அயன்புரம், த.சத்தியநாராயணன்

“யுகபாரதியின் 'நேற்றைய காற்று, பழைய பாடல்களின் அணிவகுப்பு, பாடல்களுக்கு அவர் தந்த விளக்கம் தெளிந்த நீரோடை.

சாத்தூர், எம். செல்லையா

கவிஞர் யுகபாரதியின் தொடர் திடீரென முடிக்கப்பட்டதைப் போன்ற உணர்வு. இனிக்கும் இருபதாய் - இருபது இதழ்களில் கவிஞர்களின் சிறப்புகளைப் பட்டியலிட்டுக் காட்டிய கவிஞர் யுகபாரதிக்குப் பாராட்டுகள்.

திருவண்ணாமலை, உமாதேவி பலராமன்

நேற்றைய காற்று வீச, வீசச் சுகமாயிருந்தது. இன்றைய காற்றாய் புதிதாய் வீச மாட்டாரா' என்று எதிர்பார்க்க வைத்து விட்டாரே!

சென்னை - 91, அய்யாறு வாசுதேவன்

# கௌரவத்துக்கு ராயல் சல்யூட்!

ரசிகர்கள் அனைவரது குரலாகவும் அமைந்திருந்தது 'சீசன் சீர்திருத்தங்கள்' தலையங்கம்.

திருவாரூர், ஷர்வான்

தேங்காய் உடைப்பது போல், சபாக்களில் நடக்கும் ஊழல்களைப் . போட்டு உடைத்து விட்டீர்களே!

சென்னை - 20, ஜி. சீதா

சாலமன் பாப்பையா

போஸ்ட் கார்ட் கதைகள் முக்கனிகள்.

அரியலூர், மருங்கை துரைராஜ்

“சாந்தியின் உணர்வுகளை ஏலம் விட்டுக் கொண்டிருக்கும் பத்திரிகைகள் மத்தியில், தமிழக மக்களின் மனத்திலும், சாந்தியின் மனத்திலும் சாந்தி தவழும் வகையில் கட்டுரை வெளியிட்ட கல்கிக்கு ராயல் சல்யூட்!

மேட்டுப்பட்டி, வ.க.உத்தரசாமி



# சிவமும் சக்தியும்! 17

சுதா சேஷய்யன்

இன்று யாரையேனும் கூப்பிட்டு, 'சிவபெருமான் என்றால் என்ன வடிவம்?' என்று கேட்டால், நாம் இன்று அறிந்த வடிவமாக அவர்கள் சொல்லக்கூடியது புலித்தோலை இடுப்பில் அணிந்த அந்த வடிவம்; பாம்புகளை அணிகலன்களாக அணிந்துகொண்ட சிவபெருமான். இந்தச் சிவபெருமான் என்ன செய்வார் என்று கேட்டால், 'சம்ஹாரம் செய்யக்கூடிய கடவுளாக இருக்கிறார்' என்று சொல்வார்கள். சங்கரன் = சம் + கரன்.

சிவம் என்ற வார்த்தைக்கே மங்களம் என்றுதான் அர்த்தம். சிவம் என்று சொல்வதற்கும் சிவன் என்று சொல்வதற்கும் கொஞ்சம் வித்தியாசம் உண்டு. இது காலப்போக்கிலே ஏற்பட்ட வித்தியாசம். ருத்ர தேவதையாக, சம்ஹாரத்துக்கு அதிபதியாக இருக்கக்கூடிய கடவுளையே இன்று சிவன் என்கிறோம். ஆனால், யோக சாஸ்திரத்தின்படியும் ஸ்ரீவித்யா உபாஸனை மார்க்கத்தின்படியும் 'சிவம்' என்ற வஸ்து அல்லது பொருள் இருக்கிறதே, அது பரம்பொருள். அதாவது நிர்க்குண பிரம்மம் - **மங்களம்** - அவ்வளவுதான். அதற்கு நிறம் கிடையாது; வடிவம் கிடையாது; சலனமும் கிடையாது. அசலமாக இருக்கக்கூடியது.

அசலம் என்றால் மலை. அசையாமல் (சலனமின்றி) இருப்பதால் அப்பெயர். உடலே இல்லை என்னும்போது, அதற்கு வடிவம் ஏது? அசைவு ஏது?... எதுவுமே கிடையாது. எல்லா இடத்திலேயும் பரந்து, விரிந்து, எந்தவித குணமும் இல்லாமல் இருக்கக்கூடிய பரம்பொருளுக்குத்தான் சிவம் என்று பெயர்.

## எல்லை ஒன்று இல்லாமை

'கடவுள் என்றால் என்ன? என்று கேட்டால், ஒரே வார்த்தையில் விவரிக்க முடியுமா?' வார்த்தைகளைக் கடந்த ஒன்றை நாம் எப்படி வார்த்தைகளால் வர்ணிக்க முடியும்!

பாரதியார் ரொம்ப அழகாக ஒரே ஒரு வார்த்தையில் சொல்கிறார் : 'எல்லை ஒன்று இல்லாமை' என்று. எல்லா இடத்திலும் ஸர்வ வியாபகமாக இருக்கக்கூடிய ஏதோ ஒன்று - இதுதான் சிவம்; இதுதான் பரமாத்மா. இந்தப் பரமாத்மாவாக, நிர்க்குண பிரம்மமாக இருக்கக்கூடிய சிவம், இந்த உலகத்தைப் படைக்க வேண்டும் என்பதற்காக, தன்னையே சற்றே கீழே இறக்கிக் கொள்ள வேண்டிய கட்டாயம் வருகிறது.

ஒரு பேராசிரியர் இருக்கிறார். அவருக்கு எல்லா விஷயங்களும் தெரியும். ரொம்ப பெரிய விசாலமான அறிவு அவருடையது. ஆனால் ஒரு குழந்தைக்கு ஏதாவது சொல்லிக் கொடுக்க வேண்டுமென்றால் என்ன செய்வார்? அவர், தாம் இறங்கி வந்து, குழந்தைக்குப் புரிகிற வகையிலே பேசி, விளக்கி, கற்றுத் தருவார். அதே மாதிரி, நிர்க்குண பிரம்மமாக இருக்கக்கூடிய பரமாத்மா இந்த உலகைச் சிருஷ்டிக்க வேண்டும் என்பதற்காக, ஜீவன்களுக்கு ஓர் ஆதாரத்தைத் தர

வேண்டும் என்பதற்காக, தன்னிடத்திலிருந்து தன்னுடைய குண ரூபமாக அம்பாளை சிருஷ்டிக்கிறது. அம்பாள், பரமாத்மாவின் ஒரு பகுதி; அல்லது பரமாத்மாவின் இன்னொரு வடிவம்.

## கைனடிக் எனர்ஜி!

சலனமும் குணங்களும் இல்லாத அசலமான நிர்க்குண பிரம்மம், தனக்குத் தானே குணங்களைக் கொடுத்துக் கொண்டால்தான் கீழே இறங்கி வர முடியும். அப்படி குணங்களைக் கொடுத்துக் கொள்வதற்காக வரக்கூடிய உருவம் இருக்கிறதே, அதுதான் சக்தி உருவம்.



இந்தச் சக்தியானது 'கைனடிக் எனர்ஜி' மாதிரி. விஞ்ஞானமாக இதை விவரித்தால், பொடன்ஷியல் எனர்ஜி இருக்கிறது - தண்ணீர் வேகமாகக் கொட்டுகிற போது அருவியிலேயிருந்து கீழே விழுகிறபோது, அதற்குள்ளே மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கான ஆற்றல் உள்ளடங்கிய சக்தியாக (potential) இருக்கிறது. அங்கே கொண்டு போய் அதற்கான இயந்திரத்தை வைத்துச் சுழல விட்டால் தான் மின்சாரம் உற்பத்தி ஆகும்.

பொடன்ஷியல் உள்ளடங்கிய - சக்தியாக இருப்பது நிர்க்குண பிரம்மம். அதை அசைப்பதற்கும், அதைக் கீழே கொண்டு வருவதற்கும் இன்னொரு ஆற்றல் தேவைப்படுகிறது. அந்த ஆற்றலாக இருக்கக்கூடியவள் தான் அம்பிகை பரமேசுவரி.

இந்தச் சக்தி, அந்தச் சிவத்தை ஆட்டுவிக்கிறாள்! அதனால்தான் 'சக்தி இல்லாததால் சிவனே என்று கிடக்கிறது' என்று சொல்வது.

இப்படிச் சொல்வதனால் சிவனுக்கும் சக்திக்கும் ஏதோ சண்டை வந்தது என்றோ, போட்டி என்றோ, அர்த்தம் கிடையாது. இதை நாம் நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நமது மகனீயர்கள் உருவகமாகச் சொன்னார்கள் - அவ்வளவுதான்.

ஆகவே, அசலமாக இருக்கக்கூடிய நிர்க்குண பிரும்மத்தை ஆட்டி வைக்கக்கூடிய கைனடிக் எனர்ஜிதான் சக்தி. அவ்வாறு சலனப்படுத்தக்கூடியவள், ஆட்டி வைக்கக்கூடியவள், சக்தியாக இருக்கக்கூடியவள்தான் அம்பிகை!

இந்தச் சிவத்துடன் கூடவே இருக்கக்கூடியவள் சிவகாமேசுவரி. 'காமேசுவரன்' என்றால் ஜகத்தை சிருஷ்டிக்க ஆசைப்பட்ட சிவம். அந்த ஆசையினுடைய வெளிப்பாடாகத் தோன்றியவளே காமேசுவரி.

## ஐந்து அதிபதிகள்

சரி, இரண்டு வெளிப்பாடுகள் வந்தாயிற்று. இனி இந்த உலகத்தை சிருஷ்டி பண்ண வேண்டும். படைக்க வேண்டும்; காப்பாற்ற வேண்டும்; உரிய சமயத்தில் ஒரு பொருளை இன்னொரு இடத்துக்கு மாற்ற வேண்டும்; நீக்க வேண்டும்; அழிக்க வேண்டும். ஆனால், இந்த ஐந்தும் ஏதோ சாசுவதமான காரியங்களைப் போல் நடக்க வேண்டும். ஐந்து தொழில்களும் -

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் - சீராக நடக்க வேண்டும்.

இதற்காக அம்பாள் என்ன பண்ணினாளாம், நிர்க்குண பிரம்மத்தை ஆட்டுவிப்பதற்காக சிருஷ்டியைத் தொடங்கிய அம்பாள், இந்த ஐந்து விஷயங்களையும் பார்த்துக்கொள்ள ஐந்து துறைகளை உருவாக்கினாளாம். ஐந்து துறைகளையும் ஐந்து பேரிடம் ஒப்படைத்தாளாம்.

சிருஷ்டிகர்த்தாவாக இருக்கக்கூடிய பிரம்மா படைத்தலைப் பார்த்துக் கொள்வதற்கு, ஐந்து பேரை உருவாக்கிய அம்பாள் முதல் நபரைக் கூப்பிட்டு, "உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டாளாம்.

"பிரும்மா" என்றாராம் அவர்.

"உங்கள் வேலை என்னவென்று தெரியுமா?"

"தெரியும். சிருஷ்டி செய்ய வேண்டும்."

அடுத்தது விஷ்ணுவிடம் அதே கேள்விகளைக் கேட்க, அவரும் "தெரியும், என் பணி ஸ்திதி - காத்தல்" என்றாராம்.

மூன்றாவது ருத்ரன் - சம்ஹாரம் செய்ய வேண்டியவர். "நீக்கும் தொழில்" என்றாராம்.

நான்காவதாக, மறைத்தல் என்னும் தொழிலைச் செய்ய வேண்டியவர். பெயர் "மஹேசுவரர்" என்றாராம்.

ஈசுவரன் என்று சொன்னாலே தலைவன் என்று அர்த்தம். மஹேசுவரன் என்று சொன்னால் 'பெரிய தலைவன்' என்று அர்த்தம்!

அம்பாள் பார்த்தாள்.... 'இருப்பதிலேயே பெரிய தலைவர். எல்லோருக்கும் மேலானவர் அந்தச் சிவம்தானே. அப்படியானால் அந்தச் சிவன்தானே 'ஈசுவரன்' 'மஹேசுவரன்' என்ற பெயர்களுக்கு உரியவராகிறார். ஆனால் இப்படி மறைத்தல் தொழிலுக்குரிய தேவதை தன் பெயரை மஹேசுவரன் என்று வைத்துக் கொண்டு விட்டாரே!' என்று யோசித்தாளாம்.

## அம்பாளின் நிபந்தனை!

பிறகு, 'சரி, போனால் போகிறது. பெயரை வைத்துக் கொண்டுவிட்டாலும் இவர் அந்த சிவன் அல்லர்; ஐந்தில் ஒரு தொழிலைப் பார்த்துக் கொள்பவர்தான்' என்று சொல்லி அவருக்குப் பொறுப்பை அளித்து அனுப்பிவிட்டு ஐந்தாவதாக நின்றவரைக் கூப்பிட்டாளாம். அவரிடம் "சிவம் என்பதைத் தவிர நீங்கள் எந்தப் பெயரை வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளுங்கள்" என்றாளாம்.

"என் பெயர் சிவம் இல்லை..." என்று பதில் வந்தது...

(தொடரும்)







# தகப்பன்சாமி



பஞ்சம், பட்டினி, வறுமைன்னு கிராமத்து மண் வாசனையோட கரிசல் காட்டுப் பூமியில ஆரம்பிக்கிற கதை, பிரசாந்துக்கு ரொம்பப் புதுசா இருக்கலாம். ஆனா, தமிழ் சினிமாவுக்குப் பழசு. பிரசாந்துக்கு இப்போ அமைஞ்ச இந்தக் கதை எப்பவோ வந்திருந்தா எங்கியோ போயிருப்பாரு. அந்த அளவுக்கு நடிப்புல குறை வைக்காம நடிச்சிருக்காரு.

வானம் பார்த்த பூமியா தண்ணீருக்குத் தத்தளிக்கிற பாறைப்பட்டி கிராமத்துக் காட்சிகளில் இயற்கை அழகு கொஞ்சுவது முரண்பாடு! கிராமத்து மக்கள் வேலை தேடி வறட்டுப் பூமியான ராஜஸ்தானுக்குப் போனபிறகு அடிமைகளா நடத்தப்பட்டு துன்பம் அனுபவிக்கிறதும், அங்கிருந்து தப்பிக்க முயல்வதும் இயல்பு இல்லாம அமைஞ்சிருக்கிறது திரைக்கதையின் பலவீனம்.

ஸ்ரீகாந்த் தேவாவின் வருடும் இசையோடு சோகத் தத்தளிப்பும் கிராமத்து மண் வாசனையும் ததும்பும் பாடல்கள் அனைத்தும் 'நச்'.

அட... பூஜாவா அது? ப்ச்... கிராமத்துலயே பிறந்து வளர்ந்த மாதிரியில்ல நடிச்சிருக்காங்க!

கருணாஸ் அங்கங்க லைட்டா சிரிக்க வைச்சுருக்காரு. ராஜஸ்தானிலிருந்து தப்பிக்க உதவி பண்ற நமீதை, சாமி மாதிரி காப்பாத்தியிருக்கீங்கன்னு 'தாய் சாமி' ஆக்கிட்டாங்க.

திரைக்கதைக்குக் கூடுதல் பலம் ஜெஸ்ரீதரோட ஒளிப்பதிவு. 'பாஷை மாறினாலும், பாசம் மாறாது'ன்னு வசனங்களை இயல்பா, நேர்த்தியா கொடுத்த இயக்குநர் புதுசா ஏதாவது பிரச்னையைக் கையில எடுத்துக்கிட்டுப் பண்ணியிருந்தா 'சபாஷ்' போட்டிருக்கலாம்.

- லஜ்ஜாவதி




அபிராமி மெகா மாலின்

# புத்தாண்டு - பொங்கல் நல்வாழ்த்துக்கள்






விரைவில் கண்டு மகிழுங்கள்...

**Watch cars falling in love**

## ABIRAMI MEGA MALL

152, Purasawalkam High Road, 2642 4477, 2643 1022

